# செந்தமிழ்ச் செல்வி

## உள்ளுறை





சிலம்பு ௪௬] வள்ளுவர் ஆண்டு ௨௦௦௩, பங்குனி (April'72) [பரல் ௮

# ‘செந்தமிழ்ச் செல்வி’

## இதழாசிரியர் கூட்டத்து உறுப்பினர்கள்



---



கழகப் புலமையாளர், சித்தாந்த பண்டிதர்

திரு. ப. இராமநாத பிள்ளை அவர்கள்

தோற்றம்: 1890 மறைவு: 1972

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு சசு | திருவள்ளுவர் ஆண்டு உ௦௦௩, பங்குனி ஏப்ரல் 1972 | பரல் அ |
|---|---|---|


## கழகப் பெரும் புலவரின் பேரா இயற்கை

மற்றென்று சூழினும் தான்வந்து முந்துறும் ஊழின் வலியை நாமனைவரும் உணரும்வகையில் கழகப் பெரும் புலவர் சித்தாந்த பண்டிதர், திருவள்ளுவரகம் ப. இராமநாத பிள்ளை அவர்கள் 26-3-72 அன்று பெரும் பிரிவெய்தினர். தளராத தனித்தமிழ்ப் பற்றும் சிவன்பால் இடையருத சிந்தையும் கொண்ட புலவரை, அன்று தமிழ் வளர்த்த அகத்தியன் போலக் குறுமுனியாகத் திகழ்ந்த பெரியாரை வெல்லல் அரிது என்று கால்பந்து வடிவத்தில் வந்து காலன் பற்றினன்-மிகக் கொடியன்.

மேலாடை அணியாத எளிய தமிழ்த் தோற்றம்; யார் மாட்டுங் கடுஞ்சொல் கூருப் பண்பு; எப்பொழுதும் புன்னகை யுடன் கூடிய இன்முகம்; சிறியோரையும் பெரியோராய் மதிக்கும் மாண்பு; இவையனைத்தும் ஒருருவாய் என்றும் பணியுமாம் பெருமை என்பதற்கே இலக்கணமாய்த் திகழ்ந்த வர்கள் புலவர் ஐயா அவர்கள்.

திருமுருகன் கோயில்கொண்ட திருச்செந்தூரையடுத்த குலசேகரன்பட்டினத்தில் 5-3-1890இல் பரமசிவம் பிள்ளைக்கும் வீரலட்சுமி அம்மைக்கும் அருமை மகனராகத் தோன்றிய நம் புலவரவர்கள் இளமையிலேயே தமிழ் இலக்கண இலக்கிய நூல்களை முறையாகக் கற்றூர்கள். தமிழையும் சைவத்தையும் தம்மிரு கண்களெனக் கொண்ட நம் புலவரவர்கள் சைவத்திரு

முறைகளையும் சைவசித்தாந்த சாத்திரங்களையும் கற்றுத் துறை போயினர்.

இளமையில் தம் தந்தையார் நடத்திவந்த வணிகத் துறையில் ஐயா அவர்களும் ஈடுபட்டுக் கொழும்புக்கு 1916இல் சென்று 1928 வரை கடையில் கணக்கெழுதும் வேலைபார்த்து வந்தார்கள். அப்பொழுது நம் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தை நிறுவிய திரு. வ. திருவரங் கனார் அவர்களும் இலங்கையில்தான் வணிகத்துறையில் ஈடுபட்டிருந்தார்கள். ஐயா அவர்களையும் அரங்கனார் அவர் களையும் தமிழ்ப் பற்றும் சைவசமயப் பற்றும் இணைத்தன. அரங்கனார் அவர்கள் மறைத்திரு மறைமலையடிகளாரை முதன் முதல் இலங்கைக்கு அழைத்துச் சொற்பொழிவுகளை ஆற்றச் செய்தபொழுது புலவர் ஐயா அவர்களும் அடிகளாரின் அன் பைப் பெற்று மகிழ்ந்தார்கள்.

வாழ்க்கைக்காக வணிகத் தொழிலை ஏற்றிருப்பினும் ஐயா அவர்களைத் தமிழன்னையே தழுவத் துடித்தாள். 1929 இல் செட்டிநாட்டிலுள்ள வலம்புரியில் ‘அலமேலு பெண்கள் பாட சாலை’யில் தலைமையாசிரியராகப் பணியேற்று 1941 வரை அப் பணியைச் சிறக்கச் செய்தார். 1942 இல் மீண்டும் இலங்கைக் குச் சென்றாலும் நான்காண்டுகளே அங்குத் தங்கினார்.

1946இல் தாயகம் திரும்பிய ஐயாவைக் கிட்டத்தட்ட அரசுப் பணியிலிருந்து ஒய்வுபெறும் அகவையான 56 இல் தமிழ்ப் பணிபுரியவும் சிவத்தொண்டு ஆற்றவும் சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் தன் தலைமைப் புலவராக ஏற்றுக் கொண்டது. 1971 ஆகஃட்ச்டு 15ஆம் நாள் ஓய்வு பெறும்வரை தம் மூச்செல்லாம் தமிழாகப் பேச்செல்லாம் சிவமாகக் கால் நூற்றாண்டுக் காலம் ஐயா அவர்கள் சென்னைக் கழக நிலையத் திலே பேசரியாப் பெரும்பணியாற்றியுள்ளனர்.

தமிழ் இலக்கண, இலக்கிய, சமயத்துறைகளை வைத்து மதிப்பிடும்போது அவர்கள் ஒரு நடமாடும் நூலகமாக, உலா விடும் பல்கலைக் கழகமாக, ஐயமகற்றும் அருங் கலைக்களஞ்சிய மாகத் திகழ்ந்தார்கள். எதைப்பற்றி எவர் எவ்வமயம் கேட் டாலும் எவரென்று பாராது அவ்வமயமே அதற்கு விடை கூறி ஐயமகற்றிய அருங்கலைப் புலவராக விளங்கினார்கள்.

சித்தாந்த சாத்திரக் கருத்துக்களைத் தெரிதல் அரிது; அறிதல் அதனினும் அரிது; அறிந்து உணர்தல் அரிதினும் அரிது; உணர்ந்ததை எண்ணிப் பார்த்தல் அதனினும்

அரிது. எண்ணியதைப் பிறர்க்கு எடுத்துச் சொல்லுதல் மிக அரிது; அதிலும் தெளிவாக எடுத்துச் சொல்வது மிகமிக அரிது; அதினும் கொள்வோர் திறனறிந்து கொடுப்பது அரிதினும் அரிது; எல்லாவற்றையும்விடக் கொள்வோர் இருப்பிடம் சென்று கொள்வோர்க்கேற்ற காலமுணர்ந்து கொள்வோர் நிலையறிந்து அவர்க்கேற்ற வகையில் விளக்கிச் சொல்லும் பண்பை இதுவரை யாரிடமும் எங்குங் கண்டிலம். இனி யாரிடமும் காணவும் முடியாது. இவரனைய எளிய பிறவி இனித் தோன்றல் அரிது அரிது.

புலவர் ஐயா சென்னையில் கழகப் பணியேற்றதிலிருந்து பல்வேறு தொண்டுகளைச் செய்தார்கள். கழகவழி வெளிவந்த சமய, சாத்திர நூல்களனைத்தையும் பார்வையிட்டுப் பதித்தார்கள். உரையெழுத முடியாத திருமந்திரம், திருவாசகம் போன்ற திருமுறை நூல்களுக்கு உரையெழுதியுள்ளார்கள். எளிதில் புரிந்துகொள்ள முடியாத சாத்திர நூல்களின் பழைய உரைகளுக்கு ஆங்காங்கு எளிய குறிப்புரைகளும் எழுதினார்கள்.

இல்லுறை மாதர் தம் மக்களொடு திருவிளக்கேற்றி வழிபடும் முறையை விளக்கும் 'திருவிளக்கு வழிபாடு', பள்ளி மாணவர்க்குப் பயன்படும் 'பள்ளிக்கூட வழிபாடு', திருக்கோயிலில் முறையாக வழிபடும் நெறியைக் கூறும் 'திருக்கோயில் வழிபாடு' முதலிய சிறுசிறு நூல்களை ஐயா அவர்கள் தொகுத்து வெளியிட்டு வீட்டிலும், பள்ளியிலும், கோயிலிலும் முறையான சைவ வழிபாடு நடைபெறுதற்குத் துணைபுரிந்தார்கள். சிவநெறியாம் செந்நெறியைக் கடைப்பிடித்தற்குதவும் 'திருநீறும் சிவமணியும்' 'திருவைந்தெழுத்து' 'சிவதீக்கை' போன்ற நூல்கள் சிவநெறிச் செல்வர்களுக்குப் பேருதவி புரிவன.

திருமுறைகளில் காணப்படும் நோய் நீக்கும் ஆற்றல் வாய்ந்த மந்திரப் பதிகங்களைத் தொகுத்து 'வேண்டுகோள் பதிகங்கள்' என்ற தலைப்பில் ஐந்து சிறு நூல்களைக் குறிப்புடன் ஐயா அவர்கள் வெளியிடத் துணை நல்கினார்கள்.

புலவர் பெருமானின் பெருவாழ்வு பன்னிரு திருமுறை பதினான்கு சாத்திர நூல்களின் பதிப்பிலேயே கழிந்தது எனலாம்.

பன்னிரு திருமுறையில் காணப்படும் சிறந்த பாடல்களைத் தொகுத்துச் சமயகுரவர் வரலாறும் தல விளக்கங்களும் எழுதிப் 'பன்னிரு திருமுறைப் பெருந்திரட்டு' என்ற பெயரில்

கழகத்தின் 1008வது வெளியீடாக வெளியிடுவதற்குப் புலவ ரவர்கள் ஆற்றிய தொண்டு பெரிதும் போற்றுதற்குரியதாகும். சிவஞான போதத்தின் கருவாய் விளங்கும் திருமுறைப் பாடல் களின்' தொகுப்பான 'உமாபதிசிவம் தேவார அருள்முறைத் திரட்டு'க்குப் புலவர் மாமணி அவர்கள் எழுதிய விளக்கவுரை சைவசித்தாந்தம் பயில்வார்க்குப் பெரும்பயன் தரும்.

மேற்கூறிய திரட்டுக்களன்றிப் புலவரவர்களே மூவர் தேவா ரங்களினின்றும் சிறந்த பதிகங்களைத் தொகுத்து விளக்கவுரை யோடு வெளியிடத் துணைபுரிந்தனர். அவ் வகையில் 'தேவாரப் பதிகத்திரட்டு' என்ற தலைப்பில் 'சம்பந்தர்' 'அப்பர்' 'சுந்தரர்' என்று தனித்தனியாக மூன்று திரட்டு நூல்கள் வெளிப்போந்தன.

கற்பார் நெஞ்சைக் கரைய வைக்கும் மணிவாசகரின் திருவாசகத்திற்குப் புலவரவர்கள் 'விரிவான விளக்கவுரை' யொன்றும் எளிமையாக எல்லோரும் படித்துப் பயன்பெறும் வகையில் 'தெளிவுரை' ஒன்றும் எழுதியுள்ளார்கள்.

பதினொராந்திருமுறையில் இடம்பெற்றுள்ள பட்டினத்துப் பிள்ளையாரின் திருப்பாடல்களுக்குப் புலவரவர்கள் எழுதியுள்ள விளக்கவுரை கற்பவர் உள்ளத்தைக் கவர்ந்து நெறிப்படுத்துஞ் சிறப்புடையதாகும்.

தமிழ் வேதாகம முழுமுதற் கருவூல நூலான திருமந்திரத் திற்குப் புலவரவர்கள் எழுதிய ஆராய்ச்சி விளக்கவுரை அந் நூலிற் காணப்படும் சிறந்த சாத்திர நுணுக்கங்களைத் தேர்ந்து தேற விழைவார்க்குப் பெரிதும் பயன்படுவதாகும்.

பன்னிரண்டாம் திருமுறையும் சைவப்பெரும் புராணமு மான 'பெரியபுராணம்' கழகத்தின் பொன்விழா வெளியீடாகத் 'திருத்தொண்டர் மாக்கதை' என்ற பெயரில் வெளிவந்தது. அந் நூலுக்குப் புலவரவர்கள் வரலாற்றுக் குறிப்புரை வழங்கியுள்ளார்கள். 'பெரியபுராணத்'தின் 'இலைமலிந்த சருக்கம்' 'திருநாவுக்கரசர் வரலாறு', 'சுந்தரர் வரலாறு' என்ற மூன்று பகுதிகளும் புலவர் அவர்கள் எழுதிய குறிப்புரை, பொழிப்புரை, விளக்கவுரை, இலக்கணக் குறிப்பு முதலியவற் றுடன் தனித்தனி நூல்களாக வெளிவந்துள்ளன. இவை புலவர் பட்டத் தேர்வுக்குப் பாடமாக அமைக்கப் பெற்றன வாகும்.

தொன்மைத் தமிழகத்து மெய்ந்நெறியான சித்தாந்த சைவத்தின் அளவை நூல்களான பதினான்கு சாத்திர நூல்களும் புலவரவர்களின் பார்வையின்கீழ் புதுப் பொலிவு பெற்றுள்ளன. இப் பதினான்கு நூல்களும் பழைய உரைகளோடு புலவரவர்கள் எழுதிய புது விளக்கங்களுஞ் சேர்ந்து இரு தொகுதிகளாக மலர்ந்துள்ளன.

சிவஞான போதத்திற்கு மாதவச் சிவஞான முனிவர் எழுதிய சிற்றுரை புலவரவர்களின் சித்தாந்தத் துணிவைச் செவ்விதினுணர்த்தும் விளக்கவுரையோடு வெளிவந்துள்ளது. அது சைவ மக்கட்குப் பெரும்பயன் தருகின்றது.

'தாயுமானவடிகளின்' திருப்பாடல்களுக்குப் புலவர் ஐயா அவர்கள் சித்தாந்தச் சிறப்புரை வகுத்திருப்பது தாயுமானவர் திருவுள்ளத்தைத் தமிழர்கள் நன்குணர வழிசெய்யும்.

பல்வேறு இலக்கிய, சமய, சாத்திர நூல்களில் இலைமறை காய்போல் மறைந்துகிடக்கும் சிவநெறிச் செய்யுட்களைத் தொகுத்துச் 'சிவநெறிச் செய்யுட்டிரட்டு' என்று அவர்கள் வழங்கியுள்ளது நிலையான தொண்டாகும்.

இத்தகு நுண்மாண் நுழைபுலமும் அளப்பரும் ஆற்றலும் பெற்று விளங்கிய அவர்கள் தோற்றத்தில் எளியராகவே இருந்தனர். அத்தகைய அடக்கம் அவரை அமரருள் உய்த்திருக்குமெனத் துணியலாம்.

கழகத்தில் 25 ஆண்டுகள் பணியாற்றிய காலத்தில் கழக ஆட்சியாளர் தாமரைத்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களோடு உடன்பிறந்த தமையனார் போன்று உழுவலன்புடன் பழகிய பாங்கினைப் பாராட்டாதிருத்தலியலாது.

'செந்தமிழ்ச் செல்வி'க்குக் கருத்தாழமிக்க பல கட்டுரைகளை எழுதியுள்ளதோடு பல தலைப்புரைகளையும் எழுதியுள்ளார்கள். தமிழுக்கும் சைவத்திற்கும் தீங்கேதுமேற்படின் அவருக்குண்டான சினம் குணமென்னும் குன்றேறி நின்றாரின் வெகுளியோடொத்திருக்கும்.

அவர்கள் எழுதும் உரைகளிலும் கட்டுரைகளிலும் சிறுசிறு கருத்துத் தொகுப்புக்களை வெண்பாக்களாக உடனுக்குடன் ஆக்கிச் சேர்க்குந் தனித்திறன்மிக்கவர்.

மணிவிழா, திருமணம் முதலிய இல்லச் சடங்குகள் தமிழ் முறையில்தான் நடைபெற வேண்டுமென்று கடந்த 25

ஆண்டுகளில் ஆயிரத்துக்கு மேற்பட்ட தமிழ்த் திருமணங்களை நடத்தியுள்ளார். அம் முறையை விளக்கி 'தமிழ்த் திருமணம்' என்ற சிறு நூலும் எழுதியுள்ளார்.

அவர்கள் தமிழ் முறையில் ஆற்றிவைத்த பெருமக்கள் சிலர் மணிவிழாக்களும் பிரிவுச் சடங்குகளும் கீழே குறிக்கப் பெறுகின்றன.

தென்னிந்திய இருப்புப் பாதைப் பொறிஞராகவிருந்து ஓய்வுபெற்றுத் திருச்சித் தில்லைநகரை உருவாக்கிய பெருந் திருவாளர் தில்லைவேலு முதலியாரவர்கள் தமது மணிவிழாச் சடங்கு தமிழ் முறையில் நடைபெறுதல் வேண்டுமென்று விரும்பிக் கழக ஆட்சியாளர்க்கு எழுதவே அதற்குத் தகுதி வாய்ந்தவர்கள் கழகப்புலவரவர்கள்தாம் என்று தெரிவித்து அவர்களை அனுப்பி வைத்தார்கள். புலவரவர்கள் முறைப்படி திருமுறை ஓதித் தமிழ்முறையில் மணிவிழாச் சடங்கினை நடத்தி வைத்தமையினைத் திரு முதலியாரவர்கள் ஆட்சியாளரிடம் மிகவும் வியந்து கூறித் தம் மகிழ்ச்சியையும் நன்றியையுந் தெரிவித்தனர். அவ்வாறே ஆட்சியாளர் மணிவிழாவையும் நடத்தி வைத்தனர்.

உயர்நீதி மன்ற நடுவர்களாயிருந்து ஓய்வு பெற்ற திரு. என். சோமசுந்தரம் பிள்ளை, திரு. சு. கணபதியா பிள்ளை, முதிர்ந்த அகவையில் திருமுறை யோதி முறிந்த எலும்பு கூடப்பெற்ற சிவத்திரு சேலம் சுப்பராய பிள்ளை, பதிப்புத் துறைக்குக் கூட்டுப்பங்கு நிறுவனமாகக் கழகத்தை யமைக்கும்படி ஊக்கமூட்டிய சைவத்திருவாளர் தி. செ. விசுவநாத பிள்ளை, திருமுறைகட்கு ஒளிநெறி, ஒளிநெறிக் கட்டுரைகள் எழுதிய தணிகைமணி டாக்டர் செங்கல்வராய பிள்ளை ஆகியோர் பிரிவுச் சடங்குகளையும் முறைப்படி திருமுறை ஓதித் தமிழ்முறையில் நடத்தியமை குழுமியிருந்தோர் உள்ளத்தைப் பெரிதுங் கவர்ந்தது.

அவர்கள் கழகத்திற் புலமைப்பணி செய்த காலத்தில் சடங்குகளின் பொருட்டே விடுமுறை எடுப்பதன்றி நோயின் காரணமாக எடுத்ததில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இத்தகைய பெரியாரைக் கழகம் 1008வது வெளியீட்டு விழாவிலும் கழகப் பொன்விழாவிலும் பொன்னாடை போர்த்தியும் பொற்கிழியளித்தும் பாராட்டியுள்ளது.

வாழ்க சித்தாந்த பண்டிதரின் புகழ்.

# ஒப்புமை மொழியியல்

[டாக்டர் மா. சு. திருமலை, எம்.ஏ., டி.பில்,

&

டாக்டர் கி. கருணாகரன், எம்.ஏ; பிஎச்.டி.]

தலைமுறை தலைமுறையாக மொழியில் மாற்றங்கள் ஏற்பட்டு வருவதை நாம் அறிவோம். கிளைமொழிகளில் (Dialects) ஏற்படும் மாற்றங்களையும் இதனோடு ஒத்திட்டுக் காண வேண்டும். ஒரு கிளைமொழிக்கும் இன்னொரு கிளை மொழிக்கும் நெருங்கிய தொடர்பு இருந்தால் கொண்டு - கொடுப்பு நடைபெறும். இக் கொண்டு - கொடுப்பால் இரண்டிற்கும் இடையே உள்ள வேற்றுமைகள் மறைய இடம் உண்டு. ஒரு கிளைமொழியில் புதிதாக உண்டாகும் சொல்லோ அமைப்போ (Structure) அடுத்த கிளைமொழிக்கு எளிதிலே பரவ வழியுண்டு. ஆனால், இக் கொண்டு - கொடுப்புப் பல காரணங்களால் தடைப்படுமானால் அந்த அந்தக் கிளைமொழி அதனதன் போக்கில் மாற்றங்களைச் (Changes) செய்துகொண்டு போகும். இலங்கைத் தமிழும் தமிழ்நாட்டுத் தமிழும் வெவ்வேறு அரசியல் நாடுகளில் பேசப்படுகின்றன. இரண்டையும் பிரிக்க நடுவில் கடல் இருக்கிறது. பழங்காலத்திலும் பிற்காலத்திலும் தொடர்பு நெருக்கமாக இல்லாமல் போயிருக்கும். அதனால் ஒரு கிளைமொழியில் ஏற்பட்ட மாற்றம் இன்னொரு கிளை மொழிக்குப் பரவாமலேயே இருந்துவிட்டது எனலாம்.

இனி இன்றைய மலையாள மொழியையும் இன்றைய தமிழ் மொழியையும் எடுத்துக் கொள்வோம். பழந்தமிழ் வரலாற்றால் மலையாள நாடு சேரநாடே என்பதை அறிவோம். பழந்தமிழில் இருந்து மலையாளம் எப்படிப் பிரிந்திருக்க முடியும்? ஒவ்வொரு நிலப்பகுதியிலும் தனித்தனிக் கிளைமொழிகள் இன்று தமிழ் நாட்டில் வழங்கப்படுவதைக் காண்கிறோம். இக்கிளைமொழிகள் இன்று நேற்றல்லாது பன்னெடுங்காலத்திற்கு முன்பே இருந் திருக்க வேண்டும். கால வட்டத்தில் நிலஅமைப்பு முறையால் இவ் வேறுபாடுகள் பெரிதாகி இருக்க வேண்டும். தமிழ் மொழியின் பிற கிளைமொழிகளுக்கும் சேரநாட்டில் பேசப்பட்ட கிளைமொழிகளுக்கும் நெருங்கிய தொடர்பு இல்லாமல் போயிருக்க வேண்டும். இந் நெருங்கிய தொடர்பு இல்லா மைக்குச் சேரநாட்டையும் தமிழ்நாட்டின் மற்றப் பகுதிகளையும்

பெரிய மலைத்தொடர் பிரித்தது ஒரு காரணம் ஆகலாம். மேலும் அரசியல் சூழ்நிலைகளும், வட மொழியின் தொடர்பும் என்று பல சமுதாய இயல் காரணங்களையும் சொல்ல முடியும்.

பொருளாதார அடிப்படையில் பார்த்தாலும் பாண்டிநாடு சோழநாட்டையோ தொண்டைமண்டலத்தையோ நெற்களஞ்சியச் சமவெளிக்குச் சார்ந்திருப்பது போலச் சேரநாடு சார்ந்திருக்கவில்லை என்றே சொல்ல வேண்டும். அரிசியைத் தவிர்த்துப் பிற உணவுப் பொருள்களையும் சேர நாட்டார் இன்றும் நிறையப் பயன்படுத்துகின்றனர்; அவர்கள் வணிகமும் மேலைக் கடற்கரை வழியாகவே நேரடியாகச் செய்திருக்க முடியும். இவ்வாறு பல வகைகளிலும் தமிழ் நாட்டோடு உள்ள தொடர்பு குறைந்து வந்தது மொழியமைப்பிலும் வெளியாகி இருக்கலாம். அஃதாவது தலைமுறை தலைமுறையாகக் கொஞ்சம் கொஞ்சமாக ஏற்பட்ட கிளைமொழி மாற்றங்கள் பிற சமூகப் பொருளாதாரக் காரணங்களின் துணையோடு பழந்தமிழின் இரு கிளைமொழிகளாக இருந்தவற்றை இன்றைய மலையாளமாகவும் இன்றைய தமிழாகவும் மாற்றி விட்டன என்று சொல்லலாம்.

ஒரு மொழியில் ஏற்படும் மாற்றங்கள் அம் மொழியின் எல்லாக் கிளைமொழிகளிடத்தும் பரவினால் கிளை மொழிகள் மொழிகளாவதைத் தடைசெய்ய முடியலாம். இன்று ஈழத் தமிழுக்கும் தமிழ்நாட்டுத் தமிழுக்கும் என்றைக்கும் இல்லாத அளவு கொண்டு - கொடுப்பு வானொலியாலும், திரைப்படங்களாலும், பத்திரிகைகளாலும், கடிதப் போக்குவரத்தாலும் இன்னும் பலவற்றாலும் இருக்கின்றன. இவை பெருகப் பெருக வேற்றுமை குறைய இடமுண்டு. அஃதில்லாமல் 18, 19 ஆம் நூற்றாண்டு போலவே இரண்டுக்கும் இடையில் தொடர்பு குறைந்து இருந்தால் இன்னும் சில நூற்றாண்டுகளில் ஈழத் தமிழ் வேறு மொழியாக ஆகிவிடலாம். அஃதாவது மொழியில் ஏற்படும் மாற்றங்கள் மேலும் மேலும் மாற்றங்களை விளைவிக்கும் தன்மைகள் உடையன என்பதை நாம் மனதிலே கொள்ள வேண்டும்; இவ்வாறு ஏற்படும் மாற்றங்கள் ஒரு மொழியைப் பல மொழிகளாகவும் பிளவுபடுத்திவிட முடியும். உண்மையில் இன்று ஒரு குடும்பத்து மொழிகளாகக் காணப்படுபவை இந்த முறையிலேயே பல மொழிகளாக ஆகியிருக்கின்றன என்று மொழிநூலாரில் பலர் கருதுகிறார்கள்.

குடும்ப அடிப்படையில் மொழிகளைப் பிரிப்பது எப்படி என்பதை மொழியியலார் விளக்குகிறார்கள். மலையாளமும்

தமிழும் பழந்தமிழிலிருந்து பிரிந்ததைப் பின்வருமாறு படம் வரைந்து காட்டலாம்.

பழந்தமிழ்

தமிழ் | மலையாளம்

இரு மொழிகள் ஒரே ஒரு முந்திய மொழியில் இருந்து கிளைத்திருந்தால் அவற்றை ஒரு குடும்பத்தைச் சேர்ந்த மொழிகள் எனலாம். அவ்விரண்டையும் உண்டு பண்ணி யிருக்கிற மொழியை 'அம்மா மொழி' (Proto - Language) என்றும் அதிலிருந்து கிளைத்திருக்கும் மொழிகளை 'புதல்வி மொழி' (Daughter language) என்றும் சொல்லலாம். மேலே கண்ட படத்தில் பழந்தமிழ் அம்மா மொழியாகிறது. தமிழும் மலையாளமும் புதல்வி மொழிகளாகின்றன. இம் மொழிகள் அனைத்தும் சேர்ந்து ஒரு குடும்பமாகவும் அவற்றுக்கிடையே குடும்ப உறவும் நிலவுகின்றன என்றும் சொல்ல வேண்டும்.

பழந்தமிழ் மொழி திராவிடத்தாயின் ஒரு புதல்வி என்பதை நாம் அறிவோம். அப்புதல்வியே காலப்போக்கில் இன்றைய தமிழுக்கும் மலையாளத்திற்கும் அம்மாவாக அமைந்திருக்கிருள். இவ்வாறு ஒரு புதல்வி மொழி காலம் செல்லச் செல்ல அம்மா மொழியாகவும் ஆகமுடியும். இப்போது நம் படம் பின் வருமாறு அமைகிறது.

திராவிடத்தாய்

பழந்தமிழ்

இடைக்காலத்தமிழ்

இன்றைய தமிழ் | மலையாளம்

ஒரு குடும்பத்தைச் சேர்ந்த மொழிகளுக்கு இடையில் இருக்கும் உறவை இருவகையாகப் பிரித்து நம்மால் விளக்க முடியும். கீழே கொடுக்கப்பட்டுள்ள படம் இவ்வகை உறவை விளக்குகிறது.




இப்படத்தில் 'எ' மொழியும் 'ஏ' மொழியும் A என்ற மொழியில் இருந்து கிளைத்திருக்கின்றன. இவ்விரு மொழிகளும் நேரடி உறவு கொண்டிருக்கின்றன என்று சொல்லலாம். ஆனால் 'ஓ' மொழியையும் 'கா' மொழியையும் எடுத்துக் கொண்டால், இவற்றில் 'ஓ' மொழி 'இ' மொழியில் இருந்து கிளைத்திருக்கிறது. 'கா' மொழியோ 'உ' மொழியில் இருந்து கிளைத்திருக்கிறது ; இரண்டு மொழிகளும் ஒரே மொழியில் இருந்து கிளைக்கவில்லை. ஆனல் இரண்டும் ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவையே. இந்த வகை உறவை மறைமுக உறவு என்று சொல்லலாம்.

உலகில் உள்ள எல்லா மொழிகளும் ஒரே மொழியில் இருந்து தோன்றி மறைமுக உறவே கொண்டு வழங்குகின்றன என்று சில அறிஞர்கள் சாதிப்பார்கள். அஃது உண்மைதான் என்று நிறுவவோ இல்லை என்று மறுத்து நிறுவவோ தற்சமயம் தக்க காரணங்கள் ஏதும் இல்லை. மத நம்பிக்கைகளும் கற்பனைக் கதைகளும் மனிதன் ஓரிடத்தில் தோன்றி மற்ற இடங்களுக்குப் பரவினன் என்பதுபோலவே விளக்கம் தருகின்றன. இவ் விளக்கங்கள் உண்மையா இல்லையா என்பதை விளக்க மற்ற உயிர்நூற் கலைகளே துணைபுரிய வேண்டும். மொழியமைப்பில் தக்க காரணங்கள் இல்லை என்று சொல்ல முடியும்.

ஒரு மொழி இன்னொரு மொழியோடு குடும்ப உறவு கொண்டதா இல்லையா என்பதைக் கண்டு பிடிப்பது தனிக்கலை. இக்கலையை 'ஒப்பியல் மொழிக்கலை' (Comparative Method) என்று சொல்லலாம். இது 18, 19 ஆம் நூற்றுண்டுகளில் எல்லோராலும் விரும்பிப் பயிலப்பட்ட கலை. கல்கத்தாவில் கவர்னர் ஜெனரலாக இருந்த வில்லியம் ஜோன்ஸ் என்பவர் பதினேழாம் நூற்றுண்டில் வடமொழியும் மற்ற ஐரோப்பிய

மொழிகளும் ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகள் என்ற வாதத்தைக் கிளப்பினர். இதன் அடிப்படையில் மொழிகளை ஒப்பிட்டுப் பார்த்து அவற்றின் மூதாதையர்களைக் காணும் முயற்சி தொடங்கியது. இதற்குத் துணை செய்வதேபோல் மற்ற உயிர் நூல்களிலும் பெரும் புரட்சிகரமான கருத்துக்கள் தோன்றிய வண்ணமாய் இருந்தன. அக் கருத்துக்களில் முக்கியமானது 'பரிணாமத்தத்துவம்' அல்லது 'கூர்தல் அறம்' ஆகும். தாவரங்கள் போலவே மற்ற உயிர்களைப் போலவே இயங்கும் தன்மை வாய்ந்த மொழியும் பல மாற்றங்கள் அடைவது இயல்புதான் என அறிஞர் கருதினர். ஒப்பியல் மொழிக் கலையால் பல உண்மைகள் வெளிவந்தன. அதுபோலவே பல தீமைகளும் வெளியாகின. இனத்தையும் மொழியையும் ஒன்று படுத்திப் பார்க்கும் நோக்கும், ஒரு மொழியைவிட இன்னொரு மொழி உயர்ந்தது, தாழ்ந்தது என்ற போக்கும் சில நேரங்களில் தலை தூக்கின. என்றாலும் மொழியை விவரிக்கிற முறைகள் செம்மைப்பட்ட பின்னால் ஒப்பியல்கலை சிறப்பு வாய்ந்த கலையாக மீண்டும் ஆகிவிட்டது என்பதில் ஐயமில்லை.

உலக மொழிகளை இரு பிரிவுகளாகப் பிரித்துக் கொள்வோம். முதல் பிரிவு 'எழுதப்படும் மொழிகள்' (Written Languages) என்போம். இரண்டாம் பிரிவு மொழிகள் எழுதப் படாதவை, அஃதாவது பேசமட்டுமே செய்யப்படுபவை (Spoken Languages) என்போம். முதல் பிரிவு மொழிகளில் சிலவற்றில் எழுத்துச் சான்றுகள் மிக நெடுங்காலந் தொட்டு இருக்கலாம். தமிழ் இலக்கியத்தின் வரலாறு இரண்டாயிரம் ஆண்டுகட்கு மேலாகக் கிடைக்கிறது. ஆங்கிலத்தின் வரலாறு கிட்டத் தட்ட ஆயிரம் ஆண்டுகளாக நமக்குக் கிடைக்கிறது. இம் மொழிகளில் கிடைக்கும் இச் சான்றுகளைக் கொண்டு இம் மொழிகள் காலம் காலமாக மாறிவரும் விதத்தை நாம் புரிந்து கொள்ள முடியும். இதை 'வரலாற்று மொழியியல்' (Historical Linguistics) என்று சொல்வோம்.

சில மொழிகளில் தற்கால நிலையைக் கொண்டே அகச் சான்றுகளின் அடிப்படையில் முந்திய கால நிலைமையை மீண்டும் காட்டிவிடலாம். தமிழிலே வல்லினம் என ஆறு எழுத்துக்களை நம்முடைய நெடுங்கணக்குச் சொல்கிறது. அதில் க, ச, த, ட, ப என்பவை வெடிப்பொலிகள் (Stops) ஆகும். ஆறாவது 'ற' வை நாம் r ஒலியாகவே தனியாக உச்சரிக்கும்போது சொல்கிறோம். இந்த ஒலியின் பிறப் பிடம் பல்லீறு ஆகும். மேற்கண்ட ஐந்து ஒலிகளும்

பின்னண்ணம், நடுவண்ணம், வளைநா, பல், உதடு என ஐவகை இடங்களில் முறைப்படப் பிறக்கின்றன. அவற்றிற்கு இணையாக இலக்கண நூலார் பின்னண்ண, நடுவண்ண, வளைநா, பல் மற்றும் உதட்டு மூக்கொலிகளை (Nasals) மெல்லினங்களாகத் தருகிருர்கள். 'ற' என்ற ஒலிக்கு இணையான 'ன்' என்னும் பல்லீற்று மெல்லின மூக்கொலியை யும் இலக்கணக்காரர்கள் சொல்கிருர்கள். எனவே பிறப் பிடத்தில் ஒற்றுமை இருக்கிறது. ஆனல் மற்றவை எல்லாம் வெடிப்பொலியாக இருக்க 'ற' மட்டும் ஏன் ர ஒலியாக இன்று தோன்றுகிறது என்ற கேள்வி எழுகிறது அல்லவா? ஆனல், 'ற' ஒலியும் முந்திய காலத்தில் வெடிப்பொலியாகவே, பல்லீற்று வெடிப்பொலியாகவே இருந்தது என்று கொள்ளப் பல அகச் சான்றுகள் (Internal evidences) இருக்கின்றன. இன்றைய தமிழில் 'ற' கரம் தனித்து வரும்போது ர ஒலியாகவும் இரட்டித்து வரும்போது பல நேரங்களில் வெடிப்பொலியாகவும் சில நேரங்களில் வெடிப்பொலியும் ரகர ஒலியும் [tr] சேர்ந்த கூட்டொலியாகவும் வருகின்றது. ஈழத் தமிழில் றகரம் [t] ஆகவே உச்சரிக்கப்படுகிறது. நாஞ்சில் நாட்டுத் தமிழில் ஆங்கில [t] வைத் தமிழில் எழுத றகரத்தையே பயன் படுத்துவது அவர்கள் உள்மனத்துக்குள் இவ்விரு ஒலிகளுக்கும் இடையில் இருக்கும் ஒற்றுமையை உணர்வதைக் காட்டுகிறது என்று சொல்லலாம். றகரம் ஒலியாகவே இருந்திருக்கு மென்ருல் இரட்டிக்கும்போது 'ற்ற' என்ற ஒலியாகவே ஒலிக்கப்படுவது இயல்பாக இருக்கும். இவ்வாறே மற்ற இரட்டிக்கும் ஒலிகள் எல்லாம் உச்சரிக்கப்படுகின்றன. இதற்கு வருடொலியான (Flap) ரகரம் கூட விலக்கு இல்லை. நாம் வர்ரான் என்றே சொல்கிருேம். ஆனல் றகரம் இரட்டிக்கும் போது [t] அல்லது [tr] தான் கிடைக்கிறது. மாற்றம் அடைந்த பேச்சுத் தமிழில் கூட றகரம் இரட்டிக்கும்போது வெடிப்பொலி மாற்றமே நிகழ்கிறது.

எடுத்துக் காட்டு :

| | | |
|---|---|---|
| பற்று | > | பத்து |
| வெற்றுப் பேச்சு | > | வெத்துப் பேச்சு |
| வற்றல் | > | வத்தல் |
| காற்று | > | காத்து |
| மற்றவன் | > | மத்தவன் |

அஃதாவது பல்லீற்று வெடிப்பொலியாக இருந்த றகரம் இன்றைய பேச்சுத் தமிழில் பல்லொலியாக மாறிவிட்டது.

பொதுவாக றகரம் தகர ஒலி பெறுகிறது எனலாம். இவ்வாறு இரு நிலைகளில் நாம் றகரத்தை விளக்க முடியும். முதல் நிலை பல்லீற்று வெடிப்பொலி பல்லீற்று ஒலியாகப் பயன் படும் நிலையாகும். இரண்டாவது பல்லீற்று வெடிப்பொலி பல் வெடிப்பொலியாக மாறுவது ஆகும். இவ்விரு மாற்றங்களையும் நாம் அகச்சான்றுகளின் அடிப்படையிலேயே அறிய முடிகிறது.

அகச் சான்றுகளின் அடிப்படையில் ஒரு மொழிக் குடும் பத்தைச் சேர்ந்த (Language Family) எல்லா மொழிகளையும் எல்லா நிலைகளிலும் விளக்கிவிட முடியாது. ஒரு மொழியில் ஏற்படும் மாற்றங்கள் காலப் போக்கில் எவ்விதச் சாயலையும் விட்டு விடாமல் மொழியோடு இயல்பாய் ஒன்றிவிடலாம். அந்நிலையில் ஒரு மொழியின் பழங்காலத்தை விவரிப்பது சங்கடமாக இருக்கும். மேலும் எல்லா மொழிகளிலும் எழுதப் பட்ட வரலாறு (Written history) இல்லை என்பதை அறிவோம். கிழக்கு இந்தியாவில் வாழும் மலைவாழ் மக்களின் மொழிகள் கடந்த ஒரு நூற்றாண்டுக் காலமாகவே எழுதப்படுகின்றன. அப்படி இருக்கையில் அம்மொழிகளுடைய பழைய அகச் சான்றுகளை அடையாளம் காண்பது மிகவும் சிரமமான காரிய மாக இருக்கிறது.

அகச்சான்றின் அடிப்படையைத் தவிர்த்து இன்னுமொரு முறை மொழிகளுடைய பழைய உருவத்தைக் கணிக்கப் பயன் படுகிறது. இம்முறையில் ஒன்றிரண்டு மொழிகளை நாம் ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இரு மொழிகள் தங்களுக்குள் மற்ற மொழிகளைவிட நிறைய ஒற்றுமை கொண்டிருந்தால் அவை இரண்டும் ஒரு துணைக் குடும்பம் (Sub-group) என்று சொல்ல வேண்டும். திராவிட மொழிகளில் தமிழ், மலையாளம், தெலுங்கு மூன்றையும் ஒப்பிடுகிறோம் என்று வைத்துக் கொள்ளுங்கள். நாம் இப்படி ஒப்பிட்டுப் பார்க்கும்போது முதலில் மூன்று மொழிகளும் ஒன்றுக்கொன்று ஒற்றுமை கொண்டிருக்கின்றன என்பது தெரிய வருகிறது. எனவே இம் மூன்றும் ஒரு குடும்பத்தைச் சேர்ந்தவை என்பதை முடிவு செய்கிறோம். இனி இம் மூன்றில் தமிழும் மலையாளமும் தங்களுக்குள் நிறைய ஒற்றுமையும் தெலுங்கு தனித்தும் நிற்பதைக் காண்கிறோம். எனவே தமிழும் ஒரு கிளைக் குடும்பம் என்று சொல்கிறோம்.

ஒன்றுக்கொன்று ஒற்றுமையுடைய மொழிகளை ஒப்பிட்டு அம்மொழிகளின் அம்மா மொழியை—மூதாதை மொழியைக் காணமுயலும் முறைக்குப் பெயர் 'ஒப்புமை மொழியியல்'

(Comparative Linguistics) என்று சொல்லலாம். பல காலமாக இம்முறையில் முழுக்க முழுக்க ஒலியனியலே (Phonemics) பயன்பட்டது. ஏன் என்றால் மொழியின் முதல் வெளிப்பாடு ஒலியாக (Sound) இருக்கிறது அல்லவா? ஒலி அடிப்படையில் பல மொழிகளில் வழங்கும் ஒலிகளை ஒப்பிட்டுப் பார்த்து (Phonetic Correspondences) அவை வழங்கும் விதிமுறைகளைக் கணிப்பதே பெரும்பாலானவரின் வழக்கமாக இதுவரை இருந்து வந்துள்ளது. ஆனால், ஒலிகளை மட்டும் ஒப்பிடுவது போதாது. ஒலிகளை எப்படி ஒப்பிடுகிறோமோ அப்படியே சொல்லியன்களையும் (Morphemes), சொல்லியன் அமைப்பை யும் (Morphological Structure), சொற்றொடர் அமைப்பையும் (Syntactic Structure) அவற்றில் ஏற்படும் பற்றுசு மாற்றங் களையும் நம்மால் ஒப்பிட்டுக் காண முடியும். உண்மையில் இப்படி ஒலிக்கும் மேலே நாம் சென்று ஆராய்வதுதான் ஒப்புமை மொழி முறைக்கு ஒருவித உயிர்த் தோற்றத்தைத் தருகிறது என்று கருதப்படுகிறது. ஆனால் ஒலிக்கு அப்பாலே போய் ஆராய்வது சிறிது கடினமான காரியந்தான். வழக் கிழந்த மொழிகளைக் கொண்டு ஆராயும்போது இஃது அவ் வளவாக வெற்றியடைவதில்லை. ஆனால், பேசப்படுகிற மொழிகளை ஒப்பிட்டு ஆராயும்போது நமக்கு ஏற்படும் சந்தேகங்களை விளக்கிக் கொள்ளவும் விளக்கவும் எளிதிலே முடிகிறது.

ஒன்றுக்கொன்று ஒற்றுமையுடைய மொழிகளைக் குடும்ப மாகச் சேர்ப்பது ஒப்புமை மொழியியல் என்றோம். ஒன்றுக் கொன்று ஒற்றுமை ஒரே குடும்பத்தைச் சேர்ந்திருப்பதால் மட்டும் வர முடியுமா? ஒரு மொழி இன்னொரு மொழியில் இருந்து கடன் (Borrowing) வாங்கி இருப்பதாலும் இரண்டு மொழிகள் மிக ஒற்றுமையோடு இருக்கலாம் அல்லவா? இவ்வாறு கடன் வாங்கியதால் ஏற்படும் ஒற்றுமைகளை எப்படிக் குடும்ப அடிப்படையில் ஏற்படும் ஒற்றுமைகளில் இருந்து வேறு படுத்திக் காண்பது? வேறுபடுத்திக் காணவிட்டால் தப்பும் தவறுமான உறவுகளை நாம் ஏற்படுத்த நேரிடும். அஃதாவது கடன் வாங்கியதால் ஏற்படும் ஒற்றுமைகளை நாம் புறக்கணிக்க வேண்டும். தமிழிலும், கன்னடத்திலும் நிறையச் சொற்கள் பொதுவாகப் பயன்படுகின்றன. இவற்றில் எவை குடும்ப அடிப்படையின் பேரில் இருமொழிகளிலும் பயன்படுகின்றன; எவை ஒன்றுக்கொன்று கடன் வாங்கியதின் பேரில் பயன்படு கின்றன அல்லது ஒரு பொதுமொழியில் இருந்து கடன் வாங்கியதின் பேரில் இவ்விரண்டு மொழிகளிலும் பயன்படு

கின்றன ? இக் கேள்விக்குப் பதில் காண நம் நல்லகாலம் திராவிடமொழிக் குடும்பத்தில் அவ்வளவு சிரமம் இல்லை என்றே சொல்லலாம். திராவிட மொழிகளில் தமிழ் மிகவும் பழைமையான இலக்கணங்களையும் இலக்கியங்களையும் கொண் டிருக்கிறது. அவற்றின் அடிப்படையில் அன்றைய மொழியின் நிலைமையைக் கண்டு கொள்ள முடியும். அன்றைய நிலையை இன்றைய நிலையோடு ஒப்பிட முடியும். கன்னட மொழியிலும் அவ்வாறே.

மேலும் தமிழிலே உள்ள பழைய இலக்கண நூல்கள் தமிழிலே சொல்லுக்கு முதலில் வரும் ஒலிகள் எவை என்றும் இடையிலே வரும் ஒலிகள் எவை என்றும் கடைசியில் வரும் ஒலிகள் எவை என்றும் தெளிவாகச் சொல்கின்றன. இன்றைய தமிழிலே எவ்வொலிகள் சொல்லுக்கு முதலிலே வருகின்றன, எவை இடையிலே வருகின்றன எவை கடைசியிலே வருகின்றன என்பதை விளக்க மொழியியலில் வரும் (Descriptive Linguistics) ஒலியனியல் முறைப்படி விளக்குகிறது. இப்போது பழந்தமிழ் விதிகளில் இருந்து இன்றைய தமிழில் ஏற்பட்டிருக்கிற மாற்றங்களை நாம் புரிந்துகொள்ள வேண்டும். இம் மாற்றங்கள் இருவகையாக ஏற்பட்டிருக்கலாம். ஒன்று இயல்பான தமிழ்ச் சொல் நாளாவட்டத்தில் உச்சரிக்கும் விதி முறைகளால் மாறி இருக்கலாம். அல்லது அச் சொற்கள் கடன் வாங்கப்பட்டு இருக்கலாம். இரண்டாவது நிலைதானு இல்லையா என்பதைக் காண குறிப்பிடப்பட்ட சொற்கள் தமிழோடு தொடர்புடைய வேறெந்த மொழியில் இயல்பான வையாக இருக்கின்றன என்பதைப் பார்க்க வேண்டும்; அச் சொற்கள் வழங்கும் சமுதாயச் சூழ்நிலை முதலானவற்றைக் காண வேண்டும். தமிழிலே ராமன் என்ற சொல்லைக் கவனி யுங்கள். இது ராம் என்ற அடிச் சொல்லும் அன் என்ற ஆண்பால் விகுதியும் கொண்டது. 'ரா' தமிழிலே மொழிக்கு முதலில் வருவதில்லை என்பதால் இதனை 'இ' சேர்த்து இராமன் என்று எழுதினுர்கள். இது வழங்கப்படும சூழ்நிலை சமயச் சார்பு உள்ளது. சமயச் சார்பினுல் தமிழிலே வந்து வழங்கும் சொற்களைப் பற்றி முன்பே பார்த்தோம்.

மேற்கண்டவற்றைப் படித்தும் கடன் வாங்கப்பட்ட சொற்களைத் தீர்மானிப்பது எளிதுபோல் தோன்றலாம். எது எவ்வளவோ இக்கலையில் முன்னேறி இருக்கிற மொழிகளில் கூட முழுக்க முடியாத காரியமாகும். உலகத்தில் உள்ள எல்லா மொழிகளிலும் வடமொழிச் சொற்கள் இருப்பதை நிலை நாட்டியே தீர்வது என்று தார்ப் பாய்ச்சிக் கொண்டு பாயும்

பண்டிதர்களும் அவர்களை எதிர்த்து மடக்குவது என்று கங்கணங் கட்டித் திரியும் பிறரும் தங்கள் மண்டைகள் மோதச் சண்டைகள் இடுவதைப் பார்க்கிரோம் அல்லவா? இந்தியப் பெருங்கடல் தீவுகளிலும் பசிபிக்கடல் தீவுகளிலும் பேசப்படும் நூற்றுக்கணக்கான மொழிகள் தங்களுக்குள் கொண்டும் கொடுத்தும் பல நூற்ருண்டுக் காலமாக வாழ்ந்து வருகின்றன. இக் கடன் சொற்களே (Borrowed words) இன்று குடும்பச் சொற்களாக (Native words)ப் பல மொழிகளில் காட்சியளிக்கத் தொடங்கிவிட்டன, அவற்றை எல்லாம் ஆற அமரக் கண்டு பிடித்து ஆராய்ச்சி முன்னேற வேண்டியுள்ளது. பொதுவாக ஒப்புமை மொழியியல் மெதுவாகச் செல்கிற கலை என்றுதான் சொல்ல வேண்டும். இன்று 'கணக்கிகள்' (Computers) உதவி யால் எளிதிலே ஒரு மொழியின் சொற்களை இன்னொரு மொழியின் சொற்களோடு ஒப்பிட்டுவிட முடியும். உருவ ஒற்றுமையும் பொருள் ஒற்றுமையும் கொண்ட சொற்களைப் பிரித்து எடு என்று சொன்னமாத்திரத்தில் கணக்கி உடனே அதுபோலச் செய்யத் தயாராக உள்ளது! ஆனால், பயன் என்ன? நாம் கடன் வாங்கப்பட்ட சொற்களை அவற்றில் இருந்து நீக்க வேண்டும். அவைபோகத் தற்செயலாக ஏற்படும் ஒற்றுமைகளையும் நீக்க வேண்டும்.

தமிழிலே மூன்று சொற்களை—வான், இசை, குளம் என்பவற்றை - கவனியுங்கள். தாடோ மொழியிலும் வான், இசை, குள் என்று மூன்று சொற்கள் அப் பொருளிலேயே பயன்படுகின்றன. தாடோ மொழியில் இருந்து இச் சொற்கள் தமிழ்மொழிக்கு வந்தனவா? அல்லது தமிழ்மொழியில் இருந்து தாடோ மொழிக்குப் போய்ச் சேர்ந்தன என்று சொல்வதா? இவ்விரு மொழிகளைப் பேசுபவர்களுக்கும் எந்த விதத் தொடர்பும் இல்லை. இவ்விரு மொழிகளும் வெவ்வேறு குடும்பத்தைச் சேர்ந்தன; வெவ்வேறு நிலப் பரப்புக்களில் (Different Geographical areas) பேசப்படுகின்றன. இரண் டிற்கும் ஏதாவது தொடர்பு இருந்தது என்று நாம் வலிந்து நினைத்தால் அத் தொடர்பு எப்போதோ ஏதோ ஓர் இருண்ட காலத்தில் ஏற்பட்டிருந்திருக்க வேண்டும். அப்போது அம் மொழிகள் தாடோ என்றும் தமிழ் என்றும் இருந்திருக்குமோ என்னவோ, அஃதாவது இச் சொற்களில் இருக்கும் ஒற்றுமை ஏதோ தற்செயலாக இவ்விரு மொழிகளுக்கும் இடையிலே ஏற்பட்டது; எந்தவித சிறப்புக் காரணமும் இல்லை என்றே கொள்ள வேண்டும்.

# சங்க இலக்கியத்தில்
# கூகையும் குராலும், குடிஞையும் ஊமனும் ஆண்டலையும்

(The barn owl, The Collared scops owl,
Indian great horned owl, Brown fish owl, Hawk owl.)

[பி. எல். சாமி, பி.எஸ்ஸி.]

(2)

(பரல்-எ பக்கம் சகஅ-இன் தொடர்ச்சி)

குராலின் பெயர் கபில நிறத்தினடிப்படையாகத் தோன்றி யென்பதில் ஐயமில்லை. கூகை பெரும்பாலும் வெண்ணிற மாகையால் அதனின்றும் வேருன கபில நிறமுடைய ஆந்தை வகையைச் சங்ககாலத்தில் குரால் என்றழைத்தனர். இதைச் சின்ன ஆந்தை யென்றும், நத்து என்றும் சில இடங்களில் அழைப்பதுண்டு. குராலை ஆங்கிலத்தில் The Collared Scops owl என்றும் பறவை நூலில் Otus bakkamoena என்று மழைப்பர்.

## குடிஞை

சங்க நூல்களில் குடிஞை என்ருேர் ஆந்தையினப் பறவை சில பாடல்களில் கூறப்பட்டுள்ளது. குடிஞை என்பதற்குப் பொருள் பேராந்தை என்று உரையாசிரியர்கள் கூறுவதால் இப்பறவை ஆந்தையினத்தில் பெரியது என்பது தெளிவாகின்றது.

"வேருழந் துலரி மருங்குசெத் தொழியவந்
தத்தக் குடிஞைத் துடிமரு டீங்குரல்
உழிஞ்சிவங் கவட்டிடை யிருந்த பருந்தின்
பெடைபயிர் குரலொ டிசைக்கு மாங்கட்" —புறம் 370

"இழிபிறப் பாளன் கருங்கை சிவப்ப
வலிதுறந்து சிலைக்கும் வன்கட் கடுந்துடி
புலிதுஞ்சு நெடுவரைக் குடிஞையோ டிரட்டும்" —புறம் 170

"திரிவயின் தெவிட்டுஞ் சேட்புலக் குடிஞைப்
பைதல் மென்குரல் ஐதுவந் திசைத்தொறும்" —அகம் 283

"தொடிமாண் உலக்கைத் தூண்டுரற் பாணி
நெடுமால் வரைய குடிஞையோ டிரட்டுங்
குன்றுபின் னொழியப் போகி யுரந்துரந்து" —அகம் 9

"வருந்தினை வாழியெ னெஞ்சே பருந்திருந்
துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை
யுருடுடி மருளியிற் பொருடெரிந் திசைக்குங்
கடுங்குரற் குடிஞைய நெடுபெருங் குன்றம்" —அகம் 19

"உருத்தெழு குரல குடிஞைச் சேவல்
புல்சாய் விடரகம் புலம்ப வரைய
கல்லெறி இசையின் இரட்டும் ஆங்கண்" —அகம் 89

"மயில்க ளாலக் குடிஞை யிரட்டும்
துறுகல் லடுக்கத் ததுவே" —ஐங்குறு நூறு 291

"விரலூன்று படுக ணுகுளி கடுப்பக்
குடிஞை யிரட்டு நெடுமலை யடுக்கத்துக்"
—மலைபடுகடாம் 140 - 141

"மரந்தலை மணந்த நனந்தலைக் கானத்து
அலந்தலை ஞெமையத்து இருந்த குடிஞை
பொன்செய் கொல்லனின் இனிய தெளிர்ப்ப"
—நற்றிணை 394

"துடிக்குடிஞைக் குடிப்பாக்கத்து" —பழமொழி 246

"குடிஞை யிரட்டுங் கோடுயர் நெடுவரை"
—நன்னூல் - மயிலை - மேற்கோள்

"கொடுவரி மறுகுங் குடிஞை கூப்பிடும்"
—சிலப்பதிகாரம் 2 : 13 - 31

ஆந்தை யினத்தில் ஒருவகை பெரிய ஆந்தையின் குரலோசை தனித்த முறையினதாக வெகுதொலைவில் சென்று கேட்கும் என்று பறவை நூலார் கூறுவர். சங்க நூல்களில் இத்தகைய குரலோசையுடைய பேராந்தையைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. பறவை நூலார் இந்தப் பேராந்தையின் குரலோசை 'பூ - பூஉஊ' (Bu - Bu) என்று எதிரொலி போன்று விட்டுவிட்டுத் திருப்பித் திருப்பி ஒலிக்கு மென்பர். இந்தப் பேராந்தையின் குரலோசை பெரிதாக இல்லையானுலும் வெகுதொலைவு ஊடுருவி மனிதர் காதில் மென்மையாக விழும் தன்மையது என்று பறவை நூலார் கூறுவர். (A deep, resonant hollow bu - bu repeated at

intervals, not particularly loud but with a curious penetrating and far carrying quality) சங்க நூல்களில் இந்தப் பேராந்தையின் குரலோசை பொருத்தமான, நுட்பமான உவமைகளால் மிகத் தெளிவாக விளக்கப்பட்டுள்ளது. பொன் செய்கின்ற தட்டான் ஊதுகுழல்கொண்டு தணலை ஊதும் போது 'பூம் - பூம்' என்ற ஓசை எழுப்புவது போலப் பேராந்தையின் குரலோசை இருந்ததாக நற்றிணை கூறியுள்ளது. 'பொன்செய் கொல்லனின் இனிய தெளிர்ப்ப' என்று வரும் நற்றிணை 394ஆம் பாடல் வரிக்குப் பொருள் எழுதியவர்கள் இந்த நுண்பொருள் நயத்தை எடுத்துக் கூறவில்லை. 'பொன்செய் கொல்லனின் முன்னிய இரட்ட' என்றொரு பாடம் இருப்பதாக ஔவை துரைசாமிப் பிள்ளையவர்கள் நற்றிணைப் பதிப்பில் காட்டியுள்ளார்: இதுவே பொருத்தமான பாடமாக இருக்கலாம். 'குடிஞை இரட்ட' என்றே பல பாடல்களிலும் கூறப்பட்டுள்ளது. குடிஞை 'பூ - பூ' என்று குரலோசையிடுவதும் தட்டான் 'பூம் - பூம்' என்று ஊதுவதும் மாறி மாறி ஒலிப்பதையே 'முன்னிய இரட்ட' என்று நற்றிணைப் பாடல் கூறுகின்றது. இந்த இரு ஓசைகளும் ஒரே முறையாக ஒலிப்பதால் இரட்டை ஓசைபோலக் காதில் விழுகின்றன. துடிப்பறையைக் கோல்கொண்டு உருட்டிவிட்டு ஒலி செய்யும் போது உண்டாகும் ஓசையை இந்தப் பேராந்தையின் குரலோசைக்கு ஒப்பிட்டுச் சில பாடல்கள் கூறுகின்றன. துடியின் ஓசையோடு மிகுந்த ஒற்றுமையிருந்ததால் 'துடிக் குடிஞை' என்று பொருநராற்றுப்படை கூறுகின்றது. 'துடி மருள் தீங்குரல்', 'கடுந்துடி இரட்டும்', 'உருள்துடி மகுளியின் பொருள் தெரிந்திசைக்கும்' என்றெல்லாம் சங்கப் பாடல்கள் இதன் குரலோசையை வர்ணித்திருக்கின்றன. ஆகுளிப் பறையின் கண்ணில் விரலை ஊன்றித் தேய்த்துச்செய்யும் 'பூம்-பூம்' ஓசைபோலத் திருப்பித் திருப்பி ஒலிக்கும் குடிஞை என்று மலைபடுகடாம் கூறுவதையும் காணலாம். உணவு அரைக்கும் திரிகை செய்யும் ஓசைபோலச் சேட்புலத்து இருந்த குடிஞையின் மென்குரல் மெதுவாக வந்து ஒலிக்கும் என்று அகநானூறு 283ஆம் பாடல் கூறுவது மிக நுட்பமான விளக்கமாகும். பேராந்தையின் குரலோசை தொலைவிலிருந்து வரினும் ஊடுருவி வந்து மனிதர் காதில் மெதுவாக விழும் என்று (not so loud) பறவை நூலார் கூறிய விளக்கத்துடன் அகநானூறு கூறியது எவ்வளவு ஒத்திருக்கின்றது. இந்த அகநானூறு பாட்டில் இந்த இடத்திற்கு உரை கூறியவர்கள் பொருத்தமாகப் பொருள் கூறவில்லை. 'இரட்டும்' என்ற சொல்லால் பல பாடல்களிலும் குடிஞையின் குரல் குறிப்பிடு

வதைக் கவனிக்கவேண்டும். பறவை நூலாரும் இப்பறவையின் குரலோசை எதிரொலிப்பது போன்று (resonant) கேட்பதாகக் கூறியதைக் காணலாம். இரட்டும் என்ற சொல்லே நுட்பமான கலைச்சொல்லாகும். தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் 'இரட்டைக்கிளவி இரட்டிற் பிரிந்திசையா' என்று கூறப்பட்டுள்ளது. இரட்டித்து நின்று பொருளுணர்த்தும் சொற்கள் இரட்டித்து நின்றன்றிப் பிரிந்து நில்லா என்று தொல்காப்பியர் கூறியதுபோலக் குடிஞையின் இரட்டும் ஓசையும் ஒற்றையாக என்றும் ஒலிக்காது. இதைப்பற்றியே முதலில் இரட்டைக்கிளவி தோன்றியிருக்கலாம். இரட்டைக் கிளவியையே சில பறவைகளின் இரட்டும் குரலோசையிலிருந்து பழந்தமிழன் படைத்திருக்கலாம். குடிஞை வெகுண்டு எழுப்பும் குரலோசை மலையின்மேல் உருளும் கல்செய்யும் ஓசைபோல இரட்டுவதாக அகநானூறு (89) கூறுவது நுட்பமான உவமையாகும். குடிஞை வெகுண்டு குரலோசை செய்வது 'டுக் - டுக்' என்று கேட்கும் என்றும், இம்முறையாக அலகுகளால் செய்கின்றது என்றும் பறவை நூலார் கூறுவர். கல் உருளும் ஓசையைக் குடிஞை வெகுண்டு செய்யும் ஓசைக்கு ஒப்பிட்டது அழகிய உவமையாகும். உலக்கையை உரலில் இடிக்கும் ஓசையோடு குடிஞையின் குரலோசை மாறிமாறி ஒலிக்கும் என்றும் கூறப்பட்டுள்ளது. குடிஞையின் குரலோசையைப் பொருத்தமான அழகிய உவமைகள் வாயிலாகச் சங்க நூல்கள் விளக்கியிருப்பதிலிருந்து ஆந்தையினத்தில் இந்தப் பறவை எது என்பதைத் தெளிவாகவும், உறுதியாகவும் கூற முடிகின்றது. இத்தகைய குரலோசையுடைய ஆந்தையினப் பறவையை ஆங்கிலத்தில் (Indian Horned or Eagle owl) என்று கூறுவர். பறவை நூலார் இதன் குரலோசையையே இதற்குக் காரணப்பெயராக வைத்துள்ளனர். பறவை நூலார் (Bubo Bubo Bengalensis) (பூ-போ-பூ-போ) என்று பெயரிட்டனர். இந்தப் பேராந்தையின் குரலோசையைக் கேட்டு நாட்டுமக்கள் மிகவும் பயப்படுவதுண்டு. 'உருள்துடி மகுளியின் பொருள் தெரிந்திசைக்கும் கடுங்குரல் குடிஞை' என்று வரும் அகநானூற்று வரிக்குப் பழைய உரையில் மக்கள் பயப்படும் செய்தி விளக்கப்பட்டுள்ளது. பொருள் தெரிய இசைத்தல் என்பதற்குக் குத்திப்புதை என்பதொரு பொருள்தெரிய இசைத்தல் என்றும் ஆந்தையின் குரல் போவோர் காரியத்தை உணர்த்தும் நிமித்தம் என்றும் பழைய உரை கூறுகின்றது. இந்த உரை பழைய மரபின் வழி எழுதப்பட்டதென்று தெரிகின்றது. சிற்றூர்களில் வாழும் நாட்டுமக்கள் இந்தப் பேராந்தை கத்துவதை இதே

போன்ற பொருளில் கொள்ளுகின்றனர். ஓர் ஆந்தை 'வெட்டிப்புதை' என்றும் மற்றோர் ஆந்தை அடுத்துக் 'குத்திச் சுடு' என்றும் கூறுவதாகக் கருதுகின்றனர். கேரளத்திலும் இந்த வகையான காட்டு ஆந்தை 'குத்திச்சூடு' 'குத்திச்சூடு' என்று கத்துவதாகக் கருதுகின்றனர். இதன் குரலோசை காரணமாக 'குத்திச்சூடன்' என்றே இந்த ஆந்தைக்குப் பெயரிட்டுள்ளனர். சுட்டுக்குவியெனச் செத்தோரைக் கூப்பிடுங் கூகையைப்பற்றிப் புறநானூறு 240ஆம் பாடல் குறிப்பிட்டுள்ளது. ஆதலின் சுட்டுக்குவி என்று ஆந்தைக் கூறுவதாகச் சங்ககாலத்திலேயே மக்கள் கருதியது தெரிகின்றது. சங்க காலத்திலேயே சுட்டுக்குவி என்று கூகை கூவுவதாகவும் குத்திப்புதை என்று குடிஞை பொருள் தெரிந்திசைப்பதாகவும் கொண்டனர். மலையாளத்தில் குத்திச்சுடு என்று கூவும் ஆந்தை கூகை, குடிஞையின் வேறனது. இதைக் கொள்ளிக் குறவன் என்று மலையாளத்தில் அழைப்பர்.

குடிஞை புலிதுஞ்சு நெடுவரையிலும் நெடுமால் வரையிலும், புல்சாய் விடரகத்திலும், துறுகல்லடுக்கத்திலும், கோடுயர் நெடுவரையிலும் இருந்ததாகச் சங்க நூல்கள் கூறுவது பறவை நூலில் கூறியதோடு ஒத்துக் காணப்படுகின்றது. குன்றுகள் மலைகளின் உச்சியில் காணப்பட்டதாகச் சங்க நூல்கள் கூறியது போலவே பறவை நூலாரும் குன்றுகளின் உச்சியில் காணப்படுவதைக் கூறியுள்ளனர். 'புல்சாய் விடாகத்தில்' குடிஞையிருந்ததை அகநானூறு கூறியுள்ளது. சரிவான பிளப்புகளில் விரும்பி வாழும் என்று (Partial to steep earth banks and clay cliffs of dry nullahs and rivers) பறவை நூலார் கூறியுள்ளதோடு அகநானூறு கூறும் செய்தி ஒத்துள்ளது. குறுங்காடுகள் சூழ்ந்த குன்றுகளிலும் வறட்சியான காடுகளிலும் மரங்களிலும் காணப்படும் என்று பறவை நூலார் கூறியுள்ளனர். வேர்கள் வற்றி செத்த சுரத்தில் மரத்தில் குடிஞையிருந்ததாகவும், மரங்கள் நெருங்கிய கானத்தில் ஞெமை மரத்தில் இருந்ததாகவும் சங்கப்பாடல்கள் கூறுகின்றன. வீடுகளின் அருகில்கூட மரச்சோலைகளில் காண்பதுண்டு. குடிப்பாகத்தில் கண்ட குடிஞையைப் பொருநராற்றுப்படை கூறியுள்ளது. குடிஞை வாழுமிடம், காணப்படும் சூழல் ஆகியவைகளைக் கூடச் சங்கப் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

தமிழ்நாட்டில் சேர்வராயன் மலையிலும் மேற்குத் தொடர்ச்சி மலையிலும் காடுகளில் குடிஞையைப் போன்ற மற்றொரு பேராந்தை காணப்படுகின்றது. இந்த இருவகை

களையும் பிரித்துணர்வது எளிதன்று. இந்த வகைப் பேராந்தையைக் காட்டுமூங்கா என்று மலையாளத்தில் அழைக்கின்றனர். இந்தப் பெரிய ஆந்தையை Forest Eagle owl என்றழைப்பர். இப்பறவை 'ஊ ஊ' என்று ஓசையிடும். இந்த வகைப் பேராந்தையையும் சங்கப் புலவர்கள் குடிஞை என்றே அழைத்திருக்கின்றனர் என்று கருத வேண்டும். இந்த இரண்டு வகைப் பேராந்தைகளுக்கும் உருவில் வேற்றுமை காண்பது எளிதன்று. காட்டில் இருந்த குடிஞையின் குரல் உழிஞ்சில் மரக்கவட்டில் இருந்த பெட்டைப் பருந்தின் குரலோடு இசைக்கும் என்று புறநானூறு 370ஆம் பாடல் கூறுவதைக் கவனிக்கவேண்டும். அடர்ந்த காட்டில் வாழும் இந்த வகை ஆந்தை சில சமயங்களில் பருந்து குரலோசை செய்வது போல நீண்டு ஒலிக்கும் என்று பறவை நூலார் கூறியுள்ளனர். ஒருவேளை இந்த வகை ஆந்தையின் குரலையே பருந்தின் குரலோடு புறநானூறு 370 ஒப்பிட்டுக் கூறுகின்றது என்று கருதலாம்.

குடிஞையைக் கோட்டான் என்றும் பெருங்கோட்டான் என்றும் நிகண்டுகள் கூறும். பேராந்தையின் தலையில் இரண்டு கொண்டைகள், கொம்புகள் இருப்பதால் கோட்டான் என்று அழைத்தனர். குடிஞையை நாட்டு மக்கள் கொம்பன் ஆந்தை என்றழைக்கின்றனர். கொம்பைக்கோடு என்றழைப்பதுண்டு. ஆனால் கோட்டான் என்ற பெயர் சங்க காலத்தில் வழங்கவில்லை. கொம்புகளையுடைய சிறிய ஆந்தை வகையான குராலைக் கோட்டான் என்றும் பெரிய ஆந்தை வகையான குடிஞையைப் பெருங்கோட்டான் என்றும் கூறினர். குடிஞை என்ற பெயரைப்போன்று தெலுங்கு, கன்னட, மலையாள மொழிகளில் எப்பெயரும் காணப்படவில்லை. ஆனால் வடநாட்டில் உள்ள பழந்திராவிட மொழிகளில் குடிஞை என்ற பெயருடன் ஒப்புமையுள்ள பெயர்கள் காணப்படுகின்றன. பார்ஜி மொழியில் (Parji) குஞ்ஞி (gunni) என்றும், கோண்டா (Konda) குயி (Kui) மொழிகளில் குஞ்சி (gunji) என்றும் ஆந்தையை அழைக்கின்றனர். இப்பெயர்கள் குடிஞைப் பெயரின் வேற்று உருவங்கள் என்பதில் ஐயமில்லை. ஆதலின் குடிஞை என்ற சொல் மிகப் பழைய திராவிட மொழிப் பெயராக இருக்கலாம்; இந்தப் பெயர்களைப் பேராசிரியர் எமனோ (Prof. Emeneau) திராவிட மொழிகளின் வேர்ச்சொல் அகராதியில் (D.E.D.) எடுத்துக் காட்டியுள்ளார். ஆனால் இந்த திராவிட மொழிச் சொற்களுக்கு ஒப்புமையான தமிழ்ச் சொல்லான குடிஞையைக் குறிப்பிடத்

தவறி விட்டார். ஆங்கிலத்தில் (Brown Fish Owl) என்பர் பறவை நூலார் (Bubo Zeylonensis Laschenault) என்றழைப்பர்.

சங்க நூல்களில் சிலபாட்டுகளில் 'ஆண்டலை' என்ற ஆந்தை வகையைப் பற்றிச் செய்தி காணப்படுகின்றது. பிற்கால நூல்களிலும் இதைப்பற்றிச் சில செய்திகள் வருகின்றன.

''பசும்பிசி ரொள்ளழ லாடிய மருங்கின்
ஆண்டலை வழங்குங் கானுணங்கு கடுநெறி''

—பதிற்றுப்பத்து. 25 : 8

''ஆண்டலைக் கின்ற பறழ் மகனே'' —கலித்தொகை 94

''சாவோர்ப் பயிருங் கூகையின் குரலும்
புலவூண் பொருந்திய குராலின் குரலும்
ஊண்டலை துற்றிய ஆண்டலைக் குரலும்''

—மணிமேகலை-சக்கரவாள 75-77

''அழுகுரற் கூகையோ டாண்டலை விளிப்பவுங்''

—பட்டினப்பாலை 258

''நீண்டபலி பீடத்தி லரிந்து வைத்த
நெடுங்குஞ்சிச் சிரத்தைத்த னினமென் றெண்ணி
ஆண்டலைப் புளருகணைந்து பார்க்கு மாலோ''

—கலிங்கத்துப் பரணி - கோயில் பாடியது 16

''ஊமக் கூகையு மோரியு முறழ் உறழ் கதிக்கும்
யாமத் திண்டிவந் தாண்டலை மாண்பில வழைக்குந்''

—நீலகேசி தருமம்-29

''கூகையோ டாண்டலை பாட ஆந்தை

''கோடதன் மேற்குதித்தோட வீசி''

—திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்

---

(தொடரும்)

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

## துல்[3] (துளைத்தற் கருத்து வேர்ச்சொல்)

[ஞா. தேவநேயன்]

துல்—துன் = துளை, வளை. எலித்துன் = எலிவளை. துன்னெலி = வளைதோண்டும் எலி. துன்—துன்னு. துன்னுதல் = துளைத்தல், உழுதல்.

துன்னூசி = கலப்பைக் குத்தி. "கொழுச் சென்ற வழி துன்னூசி இனிது செல்லுமாறு போல" (தொல். சி. பாயி. நச். உரை). துன்—துன்னம் = உழவு, ஊசித்துளை (பிங்).

தெ. துன்னு (dunnu), to Plough.

தெ. துன்ன போத்து = உழவெருமை.

துன் — துன்னல் = துளை. ஒ. நோ: E. tunnel. '*tunnel* = 1. Artificial Subterranean Passage through hill etc. or under river etc; Subterranean Passage dug by burrowing animal; (Mining) adit or level open at one end; main flue of chimney".

[ME, f. OF *tonel* & *tonnelle*, dim of *tonne* TUN] — எருதந்துறைச் சிற்றகர முதலி (C. O. D.).

துன் — தொன் — தொன்னை = துளையுள்ளது போன்ற இலைக்கலம். "கைக்கே யிலைகொண்டு தொன்னையுங் கொண்டு" (தனிப்பா.), 2. எச்சிற் கல்லை போன்ற இழிந்தோன். (w).

தெ., க. தொன்னெ (donne).

ஒ. நோ: E. tun.

"*tun* = 1. Large cask for wine, beer, etc., esp. formerly as measure of capacity (252 wine gallons); brewer's fermenting-vat". [OE *tunne*, = OHG, ON *tunna*, f. Gaulish *tunna*.

தொன்னைக்காது = தொன்னைபோல் மடங்கிய காது.

துள்—துள—துளவை=தொளை. (யாழ். அக.) துள்—துளை. துளைதல்=1. நீரில் விளையாடுதல். "ஆனந்த வெள்ளத் துறையிலே படிந்து மூழ்கித் துளைந்து" (தாயு. வம்பனேன். 2). 2. அழுந்திக் கிடத்தல். "குடும்பக் கூத்துட் டுளைந்து" (தாயு. சொல்லற். 7).

துளைத்தல்=1. துளையிடுதல். 2. ஊடுருவுதல். 3. துன்புறுத்துதல், தொல்லை கொடுத்தல். ஓயாமல் அவனைத் துளைக்கிறான். (உ. வ.). 4. கிண்டிக் கேட்டல், கரும விளத்தம் வினவுதல். விழாவின் வரவு செலவுக் கணக்குப் பற்றி அவனைத் துளைத்துக் கொண்டிருக்கிறான். (உ. வ.).

ம. துளைக்க., தெ. தொளுத்சு.

துளை=1. ஓட்டை, குழி, (பிங்.). 2. வாயில். 3. உட்டொளை. 4. உட்டொளையுள்ள மூங்கில் (பிங்.). 5. துளையுள்ளது போன்ற மயிர்ச் சுருட்சி. "துளையார் கருமென்குழலாய்ச்சியர்" (திவ். பெரியதி. 3 : 8 : 8). 6. வயிரக் குற்றங்களுள் ஒன்று. "துளைகரி விந்து காக பாதம்" (சிலப். 14 : 180, உரை).

ம. துள, தெ. தொள, க. தொளெ, து. தொளு.

துளைக்கருவி=துளையுள்ள இசைக்கருவி.

துளைக்கை=தும்பிக்கை. (யாழ். அக.).

துளைச்செவி=1. செவியுட்புறம். 2. உட் செவியுள்ள உயிரிவகை.

துளைப்பு—1. துளையிடுகை. 2. தொந்தரவு செய்கை. துளைப்பொன்=தூய்மைக்கு அடையாளமாகத் துளையிடப்பட்ட மாற்றுயர்ந்த தங்கம். (I. M. P. Tj. 138). (பெருங். இலாவாண. 6 : 63).

துளையம்=நீரிற் குடைந்து விளையாடுகை. "வெள்ள நீர்த் துளையமாடி" (குமர. பிர. முத்துக். பிள். 52).

துளை—திளை—திளைத்தல்=1. நீரில் முழுகுதல். 2. நீரிற் குடைந்து விளையாடுதல். 3. இன்புறுதல். 4. ஒரு வினை முயற்சியில், அமிழ்தல்.

துள்—துள—துழ. துழத்தல்=துளைத்துக் கிண்டுதல், துழாவுதல். "தொடித்தோள் துடுப்பிற் றுழந்த வல்சியின்" (புறம். 26). இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்" (புறம். 188). க. தொளசு.

துழ—துழதி=துன்பம். ''பிறவித் துழதி நீங்க'' (திவ். திருவாய். 2 : 7 : 7).

துழ—துழவு. துழவுதல்=1. கிண்டுதல், துழாவுதல். ''வழையமை சாரல் கமழத் துழைஇ'' (மலைபடு. 181.) 2. துழாவுதல்போற் சூழ வருதல். ''மாதிரந் துழவுங் கவலை நெஞ்சத்து'' (புறம். 174).

துழவு—துழவை=துழாவியட்ட (கிண்டிச் சமைத்த) கூழ். ''அவையா வரிசி யங்களித் துழவை'' (பெரும்பாண். 275). 2. சிறுபடகைச் சுக்கான்போல் திருப்ப உதவும் மூங்கிற் பற்றை. (யாழ்ப்.).

துழவை தொடுத்தல்=தண்டு வலித்தல். (W.). துழனி=கிண்டுவதுபோல் நோட்டஞ் செய்து கூறும் குற்றம். அவன் ஓயாமல் துழனி பேசுவான். (நெ. வ.).

துழ—துழா. துழாதல்=துழவுதல், சூழ்ந்து வீசுதல். ''பனிவாடை துழாகின்றதே'' (திவ். இயற். திருவிருத். 35).

துழாவாரம்=பலர் கூடிப் பிறர் செய்திகளைக் கிண்டிப் பேசும் வம்புப் பேச்சு.

துழா—துழாவு. துழாவுதல்=1. கையால் அளைதல். 2. கிளறுதல். 3. தண்டு வலித்தல். ''துளிபடத் துழாவு திண்கோற் றுடுப்பு'' (கம்பரா. குகப். 60). 4. தடவுதல். ''துழாநெடுஞ் சூழிருளென்று'' (திவ். இயற். திருவிருத். 36). 5. தடுமாறுதல். ''எண்ணந் துழாவுமிடத்து'' (திவ். இயற். திருவிருத். 28). 6. நாடுதல். ''வானு நிலனுந் திசையுந் துழாவும்'' (கலித். 145 : 43). 7. ஆராய்தல். 8. அளவளாவுதல். (பிங்).

துழ—துழை. துழைதல்=துழாவுதல், வள்ளத் துடுப்பால் துழாவிப் படகைச் செலுத்துதல். (நாஞ். வ.).

துள் — துளு — துளுப்பு. துளுப்பிடுதல் = கலக்குதல். 'குன்றிற் கருங்கடல் துளுப்பிட் டாங்கு'' (சீவக. 1112).

துளுப்பு—துடுப்பு=1. சட்டுவம். ''இட்டார் தொடு கழலார் மூழை துடுப்பு'' (பு. வெ. 6 : 23). 2. அகப்பை. ''துடுப்பிற் றுழந்த வல்சி'' (புறம். 26). 3. துழாவுமணை. 4. அகப்பை போன்ற காந்தள் மடல். ''பஃறுடுப் பெடுத்த வலங்குகுலைக் காந்தள்'' (அகம். 108). 5. வலிப்புத்தண்டு. 6. பூங்கொத்து (யாழ். அக.).

ம. துடுப்பு, க. துடுப்பு, தெ. துடுப்பு (d).

துளு—துடு—துடுவை=நெய்த் துடுப்பு.

"துடுவையா னறுநெ யார்த்தி" (திருவிளை. திருமணப். 184);

துழை — துடை. துடைத்தல் = 1. தடவி நீக்குதல். "வான்றுடைக்கும் வகைய போல" (புறம். 38). 2. பெருக்கித் தள்ளுதல். "தூளி......ஆர்ப்பது துடைப்பது போன்ற" (கம்பரா. கும்பகர்ண. 101). 3. கைவிடுதல். 4. அறுவாக் குதல். 5. நீக்குதல். "தன்கேளிர் துன்பந் துடைத் தூன்றுந் தூண்." (குறள். 615). 6. கொல்லுதல். "துடைத்த காலன்றனை" (ஞானவா. சுக்கி. 18.) 7. அழித் தல். "படைப்பாய் காப்பாய் துடைப்பாய் போற்றி" (திருவாச. 4 : 100).

ம. துடெக்க, க. தொடெ, தெ. துடுச்சு. துடை—துடைப்பு—துடைப்பம் = விளக்குமாறு. "உரோமநீள் வால்க ளற்றன துடைப்ப மொத்தலின்" (உத்தரரா. இலங்கையழி. 31).

துடைகாலன் = தன் குடும்பத்திற்குக் கேடுவிளைக்கும் ஆக்கங் கெட்டவன்.

துடைகாலி = தன் பிறந்தகத்திற்கு அல்லது புகுந்தகத் திற்குக் கேடுவிளைக்கும் ஆக்கங் கெட்டவள்.

துழவு—துடவு = ஒரு முகத்தலளவு. "ஒரு துடவு நெய் யும்" (T. A. S. ii, 86).

துடவு—தடவு. தடவுதல் = 1. துழாவுதல்போற் கையால் தேய்த்தல், பூசுதல், தலைக்கு எண்ணெய் தடவு. (உ. வ.). 2. வருடுதல். "தந்நெஞ்சந் தாமே தடவாரோ தானவர்கள்" (கம்பரா. மாயாசனக. 80). 3. தகட்டுப் பணிகாரஞ் செய்தல் (யாழ்ப்). 4. படியால் தலைதட்டி யளத்தல். தலைதடவ மூன்றுபடி கொடுத்தாள். (உ. வ.). 5. யாழ் போன்ற நரப்புக் கருவியை இயக்குதல். 6. இருட்டிற் கைகால் முதலியவற்றால் துழாவுதல். "காலினாற் றடவிச் சென்று" (பெரியபு. இளையான் குடி. 18). 7. திருகுதல். 8. இருட்டில் உரிமை யல்லா தவளைப் புணர்தல். 9. தேடுதல். "பிலந்தடவி" (கம்பரா. நட்புக்கோ. 53). 10. தடுமாறுதல். 11. குடிகாரன்போல் தள்ளாடுதல். "களிப்பட்டா னிலையேபோற் றடவுபு" (கலித். 101). 12. பன்னாங்குழி விளையாட்டிற் குழியைத் தடவிக்

காயெடுத்தல். 13. குருடன் எழும்ப லெழுத்தைக் கையா லறிதல். 14. பயிற்சிக் குறைவால் அல்லது பார்வைக் குறைவால் கைவைத்துப் படித்தல். 15. முட்டுப் படுதல்.

ம. தடவுக, தெ. தடவு.

துல் — துர் — துர. துரத்தல் = 1. துளைத்தல். (நாஞ்.வ). 2. உட்செலுத்துதல். "துரப்பமை யாணி" (பொருந. 10.)

துர — துரவு = 1. பாசனத்திற்கு உதவும் பெருங்கிணறு. "துரவுகிணறு இழித்தப் பெறுவதாகவும்" (S. I. I. ii, 509). 2. மணற்கேணி. 3. துருவியாராயும் வேவு. துப்புத் துரவு. (இணைமொழி).

ம. துரவு, தெ. தொருவு (பெருங் கிணறு).

துர — துரப்பு = 1. மலையிற் குடையப்பட்ட பாதை. (நாஞ். வ.). 2. உள் முடுக்குகை. "துரப்பமை யாணி" (பொருந. 10).

துரப்புதல் = துருவித் தேடுதல், தேடுதல். "எனதொரு வாய்க்கு நால்வாய்க்கு மிரையெங்கே துரப்புவேனே" (தனிப்பா. i, 181 : 3).

துரப்பு — துரப்பணம் = துளையிடுகருவி.

ம. துரப்பணம். துரப்பு — துரப்பை = துழாவித் தூர்க்கும் வார்கோல். (நாஞ். வ.).

துர — துரக்கு — திரக்கு. திரக்குதல் = தேடுதல். "ஊரெங்குந் திரக்கியும் திருட்டுப்பயல் அகப்படவில்லை. (நாஞ். வ.).

துர — துற. துறத்தல் = துளைத்தல், துளைத்து உள் ளிருப்பதை வெளிப்படுத்துதல்.

துற — துறவு = 1. மருமம், மறைபொருள். "உறவு கொண் டவரவர் துறவு கண்டேன்" (சீதக். 41). 2. வாய்ப் பான நிலை. "சோடாய் மரத்திற் புறவிரண்டிருந்திடத் துறவு கண்டே வேடுவன்" (குமரே. சத. 85). 3. வெளியிடம்.

துற — துறவை = 1. வெளியிடம். 2. வெளிப்படை யானது.

துற — துறப்பு = 1. துளைத்துத் திறத்தல். 2. திறக்கும் திறவுகோல். 3. திறக்கப்படும் பூட்டு. (பிங்.)

துறப்புக் குச்சு = திறவுகோல்.

துரப்பணம்—துறப்பணம்.

துற—திற. திறத்தல் = 1. கதவு திறத்தல். "அறவை யாயின் நினதெனத் திறத்தல்". (புறம். 44). 2. பூட்டைத் திறத்தல். 3. சுவர் நடுவே யிடித்து வழியமைத்தல். 4. வானத்தை மூடியிருந்த முகில் நீங்குதல். 5. துன்பம் நீங்க வழியுண்டாதல். வாளால் வழிதிறந்தான் பணம் என்பது ஒரு பழங்காசு (Pudu Insc. 767.). 6. குடை, பொத்தகம், ஆடை முதலியவற்றை விரித்தல். 7. திரையை நீக்குதல். 8. மண்டை வெடித்தல் அல்லது பிளத்தல். தடியடியால் தலை திறந்து விட்டது. (உ. வ.). 9. மனத்திலுள்ள மருமத்தை வெளிப் படுத்துதல். 10. துளைத்தல்.

ம. துறக்க, தெ. தெர, க. தெறெ.

திறந்த மடம் = நாற்புறமும் அடைப்பில்லாக் கூடம்.

திறந்தமனம் = மறைவாக உள்ளொன்றும் இல்லாத உள்ளம்.

திறந்தவெளி = கட்டிடம் மரம் குன்று முதலியன இல்லாத வெட்டவெளி.

திற—திறப்பு = 1. பிளப்பு. "மண்டிறப் பெய்த வீழ்ந் தான்." (கம்பரா. கும்பக. 195). 2. திறவுகோல். (யாழ்ப்.). 3. வெளியிடம்.

க. தெறப்பு, தெ. தெரப்பி.

துன் = துளை. துன்னுதல் = துளை போன்ற வாய்க்குட் செலுத்துதல், உண்ணுதல். ஒ. நோ : உள்—உண்.

இவ்வினை (துன்) இன்று வழக்கற்றது. துன்—துற்று. துற்றுதல் = 1. உண்ணுதல். "கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி" (அகம். 36.). 2. கவ்வுதல். "இகலன்வாய்த் துற்றிய தோற்றம்." (களவழி. 28). க. துத்து.

துற்று = உணவு. "பற்றின்று துற்றின்று" (பு. வெ. 10 : 4). 2. கவளம். "முற்றுற்றுந் துற்றினை" (நாலடி. 190).

துற்றர் = உண்பவர். "விரைந்தால முண்ணுந் துற்றரை" (தேவா. 204 : 9).

துற்றவை—நுகர் பொருள். "துற்றவை துறந்த வெற்றுயி ராக்கை". (திருவாச. 3 : 137).

துற்றி=உணவு, உண்பவை. (திவா.).

துன்—தின். தின்னுதல்=1. உண்ணுதல். "இரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலின்" (புறம். 150). 2. சிற்றுண்டி யருந்துதல். 3. மெல்லுதல். 4. மிகுதியாய் உண்ணுதல். 5. அரித்தல். ஏட்டுச் சுவடியைக் கறையான் தின்றுவிட்டது. (உ. வ.). 6. வருத்துதல். "பிணிதன்னைத் தின்னுங்கால்" (திரிகடு. 88).

"கண்ணுங் கொளச்சேறி நெஞ்சே இவையென்னைத்
தின்னும் அவர்க்காண லுற்று". (குறள். 1244)

7. சொறிவெடுத்தல். "தின்றவிடஞ் சொறிந்தாற் போல" (திவ். திருவாய். 4 : 8 : 9). 8. பிறர் பொருளை நுகர்தல். என் சொத்தை யெல்லாந் தின்றுவிட்டான். (உ. வ.) 9. அராவுதல். "அரந்தின்ற கூர்வேல்" (கம்பரா. சம்புமா. 6.). 10. வெட்டுதல். "கோணந்தின்ற வடுவாழ் முகத்த" (மதுரைக். 592). 11. அழித்தல். "அறிவழுங்கத் தின்னும் பசிநோயும்" (திரிகடு. 95). 12. பெறுதல். "கானகம் போய்க் குமைதின்பர்கள்" (திவ். திருவாய். 4:1:2). நன்றாய் அடி தின்றான் என்பது உலக வழக்கு.

ம தின்னுக, க. தின், தினு, தின்னு; தெ. தினு, கோத். தின், துட. தின்.

தின் — தின்றி = தின்பண்டம், உணவு (திவா.). க. திண்டி.

தின்றிப் போத்து=பேருண்டியான். க. திண்டிப்போத்த.

தின்னி=அடிக்கடி யுண்பவன், பேருணவினன். தின்—தீன்=உணவு. "தீனுறுதன" (கம்பரா. சேதுபந்தன. 28.). ம. தீன்.

தீன்—தீனி=1. சிற்றுண்டி. 2. விலங்குணவு. 3. இன்சுவை யுண்டி. "தீனியிலாசை தெவிட்டாது தேவர்க்கும்" (திருமந்.)

ம. தீன், க., து. தீனி.

தின் — திற்று — தீற்று. தீற்றுதல் = 1. ஊட்டுதல். "நென்மா வல்சி தீற்றி" (பெரும்பாண். 343). 2. சுண்ணம் சுதை முதலியவற்றாற் சுவரைப் பூசுதல். 3. நிற மூட்டுதல். "வெண்மை தீற்றிய.......மாளிகை" (கம்பரா. நகரப். 27). 4. சாம்பல் முதலியவற்றால் பல்விளக்குதல்.

(தொடரும்)

# ஆய்வுக் கோவை-ஒரு திறன் ஆய்வு

[பேராசிரியர், ஆ. சிவலிங்கனர், மயிலம்]

## (2) மாதவி

'முதற்காப்பியத்தின் முரண்தொடை' என்ற கட்டுரையாசிரியர், கோவலன் கண்ணகியுடன் வாழ்ந்த காலத்தில் காதலைக் கோவலனுக்கே யுரியதாக்கிக் கூறியதுபோல அவன் மாதவிபால் இருந்த காலத்தில் மாதவிக்கே யுரியதாக்கிக் கூறியுள்ளார்.

(1) "அங்கு (கண்ணகி வீட்டில்) கோவலனிடத்திருந்த கண்ணகிபோல் இங்கு (மாதவி வீட்டில்) மாதவிபால் காதலைப் பற்றிக் கவலைப்படாது கட்டைபோல் நின்ருன் அவன் (கோவலன்)."

என்றெழுதியுள்ளார். மாதவி, கண்ணகி ஆகிய இருவரிடத்தும் இருந்த முரண்பாடுகளை நல்ல முறையில் தெளிவு படுத்தியுள்ளார் கட்டுரையாளர்; எனினும், "மாதவியுடன் கோவலன் இருந்தபோது காதல் மாதவியிடமே சிறந்தது; கோவலனிடம் சிறிதும் இல்லாமலே போய்விட்டது" என்ற கருத்து மட்டும் ஏற்புடையதில்லை.

"கயமலர்க் கண்ணியும் காதற் கொழுநனும்" (மணி-11) என்ற விடத்துக் "காதற் கொழுநன்" எனக் கோவலனைக் கூறியிருத்தலின் காதல் கோவலனுக்கே யிருந்தது எனக் கொண்ட கட்டுரையாளர்,

"கலவியும் புலவியும் காதலற் களித்து (அந்தி-32) மகிழ்ந்தாள் மாதவி எனக் கூறிய விடத்தும், 'காதலன்' எனக் கோவலன் கூறப்பட்டிருத்தலின் மாதவி பால் காதலுடையவன் எனக் கொண்டிருக்கலாமே!

மாதவிபால் செல்வதற்கு முன்னர் அவளைப்பற்றிக் கோவலன் அறியான். சென்ற பின்னர் அவளால் பெற்ற இன்பத்தால் அவளிடம் நீங்காக் காதல் கொண்டான். அக் காதல் கொள்ளக் காரணம்,

> *"நிலவுப் பயன்கொள்ளும் நெடுநிலா முற்றத்துக்*
> *கலவியும் புலவியும் காதலற் களித்து ஆங்கு*
> *ஆர்வ நெஞ்சமொடு கோவலற் கெதிரிக்*
> *கோலங் கொண்ட"*
>
> *(அந்தி. 31-34)*

மாதவி செயல்களேயாம். அதனால் தான் அவன் அவளை விடுதலறியா விருப்பினனாகி வடுநீங்கு சிறப்பின் மனையகம் மறந்தான்.

கண்ணகி பால் கோவலனுக்குக் காதல் உணர்வே மிகுந்திருந்தது. அவளுக்கும் அப்படியே. அதனால் அவன் அவளைப் பலபடப் பாராட்டினான். ஆனால் மாதவிபால் அவனுக்குக் காதலுணர்வோடு காமவுணர்வும் மிக்கிருந்தது. மாதவிக்கும் அப்படியே. அதனால் தான் மாதவியை விட்டுவர முடியவில்லை. மாதவியும் காமவுணர்வால் கலவியைக் கோவலனுக்களித்ததாகவும் காதல் உணர்வால் புலவியை அளித்ததாகவும் இளங்கோவடிகள் கூறினார். ''கலவியும் புலவியும் காதலற்களித்து'' என்றது மட்டுமன்றிப் பிறிதோரிடத்தும் ''ஊடலும் கூடலும் கோவலற் களித்து'' மகிழ்ந்ததாகவும் அடிகள் கூறினார்.

(2) ''தலைவி ஊடல் கொள்ள அவ்வூடலை நீக்கித் தலைவன் கூடுதலே காதல் மரபு. இங்கே தலைவன் கோவலன் தான் ஊடுகிறான்''

என்று கட்டுரையாசிரியர் கூறி, மாதவி யூடல் கொள்ளவே யில்லை என்றார். கலவியை அளித்தாள் என்றால் கோவலன் ஊடியிருந்தபோது அது நீக்கிக் கூட்டத்தை யளித்தாள் என்பதும், புலவியை அளித்தாள் என்றால் கோவலன் கூட்டத்தை விரும்பியபோது ஊடினாள் என்பதும் கருத்தாகும். ''கலவியும் புலவியும் காதலற் களித்து'' என்புதற்கு அடியார்க்கு நல்லார்,

> *''தன் காதலனுக்கு ஒருகாற் கலவியையும் மறுகாற் புலவியையும் மாறியளித்து''*

எனப் பொருள் எழுதியதும் காணலாம். எனவே இருவருமே ஊடலும் கொண்டிருந்தார்கள் என்னலாம். ஊடுதல் தலைவனுக்கும் உண்டு. தலைவிமாட்டு உணர்ப்புவயின் வாரா ஊடல் தோன்றின் அது குறித்துத் தலைவனும் ஊடுதல் உண்டு. இதுவும் மரபு தான். திருவள்ளுவரின் 'நெஞ்சொடு புலத்தல்,' 'புலவி' என்ற அதிகாரங்களில் காணலாம்.

கண்ணகி, தன் கணவன் கோவலன் எது செய்யினும் ஏற்று மறுக்காமல்—மாற்றாமல்—அவன் விருப்பப்படியே நடந்தவள். மதுரையில் மாதரி வீட்டில் உணவருந்திய பின்னர்க் கோவலன் கண்ணகியைப் பாராட்டி,

> ''யான் சிலம்பு கொண்டு விற்றுப் பொருளீட்ட
> விழைகிறேன்; என்னுடன் மதுரைக்கு நீயும்
> புறப்படு' என்றவுடன் புறப்பட்டு விட்டாயே! என்னே
> நின்செயல்!''

என வியந்து கூறியபோது கண்ணகி,

> ''யாவதும், மாற்ருவுள்ள வாழ்க்கையேன் ஆதலின்
> ஏற்று எழுந்தனன்''

எனக் கூறியுள்ளது காணலாம். எனவே கண்ணகி ஊடல் கொள்வதற்கே இடம் இல்லை.

ஆனல் மாதவியோ ஆடல் பாடல்களில் வல்லவளா யிருந்ததுபோலவே காமத்தொடு கூடிய காதற் கலையிலும் வல்லவளாயிருந்து கோவலனிடம் செலுத்தி வந்தாள். (கட்டுரையாசிரியர் மாதவி காதற் கலையிலும் வல்லவள் என்றது பொருத்தமே). அதனுல் கோவலனிடம் ஊடலும் கூடலும் தான் கொண்டது மட்டுமன்றிக் கோவலனும் கொள்ளுமாறு நடந்தாள். உணர்ப்புவயின் வாராவூடலும் அவன்பால் இருந்தது. ஊழ்வினை வயத்தால் கானல்வரிப் பாட லால் வந்தது ஊடலாக இல்லாமல் வெறுப்பாக மாறியது.

எனவே மாதவிக்கு மட்டுமே கோவலனிடம் காதல் உணர்வு இருந்தது, கோவலனுக்கில்லை என்பது பொருந்துவ தில்லை.

*  *  *  *

''சலம்புணர் கொள்கைச் சலதி மாதவியர்'' என்ற தலைப் புக் கட்டுரை, புலவர், திரு. கு. திருமேனி அவர்களால் எழுதப்பட்டுள்ளது. தலைப்புக் கேள்விக்கு நேர் விடை அவர் கட்டுரையில் இல்லை. அன்றியும் மாதவியைச் சலதி என்று கூறியவர் யார் என்பதையே மறந்து எழுதப்பட்டுள்ளது. மாதவியின் கானல் வரிப்பாட்டில் வந்த வெறுப்பால் (ஊழ் வினையால்) பிரிந்த கோவலன் தன் மனையகம் நினைந்து கண்ணகியிடம் வந்தபோது அவன் கூறிய மொழி (மாதவியைப் பற்றி) ''சலம்புணர் கொள்கைச் சலதி'' என்பது. அப் பொழுதைய மன நிலையில் அவன் அவளைத் தவருக நினைத் தான்; அவ்வளவே. மதுரைக்கு ஏகும் வழியில் கோசிகமாணி என்பவன் மாதவியின் ஓலையைக் காட்டியபோது அதனை நன்ருகப் படித்து முடிவாக, ''அவள் குற்ற முடையவளில்லை; யானே குற்ற முடையவன்'' என்ருன் கோவலன். ''தன் தீது இலள்; என் தீது'' (13 : 94-95) என்றதாக அடிகள் கூறியுள்ளார். மாதவியைச் சலதி என்றவனும் பிறகு

உண்மையுணர்ந்து இல்லை என்றவனும் கோவலனே. ஆதலின் இத்தலைப்புக் கட்டுரையே தேவை யில்லாதது என்னலாம்.

இக்கட்டுரையில் சில கருத்துகள் வேண்டாதன என்றாலும் தாமே வரவழைத்துக்கொண்டு இருபத்துமூன்று வினாக்களை எழுப்பி அவற்றுக்கு நேர்விடையும் காணாமல் ஐயங்களாகவே நிறுத்தி வினாக்களே விடை என்பதுபோல் கொண்டு முடிவாக ஒரு தொகுப்புக் கருத்தினை எழுதியுள்ளார் ஆசிரியர். தொகுப்புக் கருத்து ஏற்றுக்கொள்ளக் கூடியதுதான். ஆனால் அவர் எழுப்பிய வினாக்கள் பொருந்துவன அல்ல. வினாக்கள் இருபத்துமூன்றாயினும் கீழ்வரும் சில வினாக்களிலேயே யாவும் அடங்கும். ஆதலின் அவ்வினாக்களை மட்டும் எழுதிப் பதிலும் எழுதுவேம்.

(1) பரத்தையிற் பிரிந்து வந்த கணவன் தன் பரத்தமை ஒழுக்கத்தைத் தலைவிமாட்டுக் கூறுவது மரபு அன்று (கோவலன் கூறியது ஏன் ?)

அகப்பொருள் இலக்கணம் என்பது உலகில் ஆங்காங்கு அவ்வப்போது நடைபெற்றுவரும் ஒழுகலாறுகளை ஒரு கோவைப்படுத்திக் கதைபோலக் கூறப்படுவதேயன்றி அவ்விலக்கணம்போல உலகில் நிகழவேண்டும் என்பதோ, நடைபெற்ற கதையைக் கூறவரும் புலவர் அக்கதையையும் அவ்விலக்கணம்பற்றியே கூறவேண்டும் என்பதோ இல்லை.

தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் முதற்கண் எதிர்ப்படும்போது தலைவன் தலைவியைப்பற்றி, 'நீரணங்கோ, மலையணங்கோ! என்றெல்லாம் ஐயப்படுவதுண்டு' என்ற அகப்பொருள் இலக்கணம் தலைவியானவள் தலைவனை ஐயப்படுதல் கூடாது என விதித்திருக்கிறது. இதற்கு மாறாகச் சேக்கிழார் தமது சுந்தரர் வரலாற்றில் சுந்தரர் பரவையாரைக் "கற்பகத்தின் பூங்கொம்போ, காமன்தன் பெருவாழ்வோ" என்றெல்லாம் ஐயப்பட்டதுபோலவே பரவையாரும் சுந்தரரைப் பற்றி "முன்னே வந்து எதிர்தோன்றும் முருகனோ, தன்னேரில் மாரனோ" என்றெல்லாம் ஐயப்பட்டதாகப் பாடியுள்ளார். அதனால் பரத்தமை ஒழுக்கத்தைத் தலைவிமாட்டுக் கூறுவது மரபு அன்று என்று சொல்லிக் கோவலன் கண்ணகியிடம் தன் பரத்தமைபற்றிக் கூறியது பொருந்துவதில்லை என்பது பொருந்தாது.

(2) கோவலன் மாதவிக்குப் பொருளீயத் தன் மனைக்கு அவ்வப்போது சென்று வந்தானா? (சென்று வந்ததாக யாரோ கூறியதாகக் கொண்டு பல வினாக்கள்.)

கோவலன் மாதவிக்குப் பொருளீயவேண்டி அவ்வப்போது தன் மனைக்குச் சென்று வந்ததாக யாரும் சொல்லவில்லை. மாதவிபால் சென்ற அன்றிலிருந்தே "வடுநீங்கு சிறப்பின் தன்மனையகம் மறந்துவிடுதலறியா விருப்பினன் ஆனன்" என்பது இளங்கோவடிகளே கூறிவிட்ட ஒன்று.

மனையகம் வந்து போனன் என்றே கொள்வதாலும் தவறில்லை. மனையகம் மறந்தான் என்றதால் கண்ணகிக் கூட்டத்தை மறந்தான் என்றே கொள்ளலாம். எனவே மனைக்கு வந்து (ஆள் மூலம்) பொருள் கொண்டு சென்றான் என்பதாலும் தவறு நேராது. அதனுல்தான், தேவந்தி என்ற பார்ப்பனத் தோழியிடம் கண்ணகி தன் கனவுரைத்தாள். அதற்கு அவள் ஆறுதலாக, 'கணவனுல் வெறுக்கப்பட்டா யில்லை' (9. 51.) என்றாள்.

(3) மாதவி பொருளுக்காகத்தான் கோவலனிடம் உறவு கொண்டாளா? (மாதவி பொருட் பெண்டா?)

மாதவி பொருளுக்காக மட்டும் கோவலனிடம் உறவு கொள்ளவில்லை. ஆடல் பாடல் வல்லவளாதலின் அவற்றில் உணர்வுடைய கோவலனுக்கு அவற்றால் மகிழ்வூட்டித் தானும் மகிழ்ந்து குலமகள் ஒழுக்கம் கொண்டாள். எனினும் கணிகை மகளாதலினுலும் ஆடல் கோலத்துக்கு இன்றியமையாது வேண்டப்படுதலினுலும் கோவலன் தந்த பொருள்களை— அணிகலங்களை விரும்பிப் பெற்றாள். கோவலன் 'செல்லாச் செல்வன்' என்றறிந்தவளாதலின் அவன் தந்த அணிகலங்களால் வறுமையடைவான் என எண்ணுதவளானாள். கோவலன்பால் இன்பத்தையும் பெரிதும் விரும்பியிருந்தாள். ஆதலினுல்தான் கானல்வரியில் பிரிந்த கோவலனிடம் காண்பிக்கச் சொல்லி வசந்தமாலையின் கையில் கொடுத்தனுப்பிய ஓலையில் தன் காமக்குறிப்பை வெளியிட்டாள். வசந்தமாலை ஓலையைக் கோவலனிடம் தந்தபோது அவன் அதை மறுத்ததும் வாளாதிரும்பிய வசந்தமாலையைப் பார்த்து "மாலை வாராராயினும் காலை காண்குவம்" என்று கூறி அமைதி பெற்றாள். எனவே பொருட் பெண்டு என்னும்படி மாதவி இருந்துவிடவில்லை என்னலாம். ஒருகால் கோவலன் தனக்குப் பொருளீந்து வறியவனானன் என்பது தெரிந்திருந்தாலும் அவன்பால் அவள் வெறுப்பில்லாமலேயே அன்புடன் இருந்தாள் என்னலாம்.

(4) கோவலன் அறம் செய்த பொருள் யாருடையது?

இவ்வினு தேவையில்லை. அவன் கலம் செலுத்தியோ பிறவழியிலோ பொருளீட்டியதாக அடிகள் பாடவில்லை.

அவனுக்கென்று அவன் தந்தை ஒதுக்கிய பொருளையே அறம் செய்தான் என்று கொள்வதில் தவறில்லை. அல்லது திருமணத் துக்கு முன்னர்த் தன் தந்தையுடன் சேர்ந்து ஈட்டிய பொரு ளாகவும் இருக்கலாம். கோவலனை இளங்கோவடிகள், ''மண் தேய்த்த புகழினன்'' என்று அறிமுகப்படுத்துவதால் அவ னுக்கு ஊழ்வயத்தால் வந்த குறைபாடு தவிர வேறு குறை பாடுகள் இல்லை என்று நாம் கொள்ளவேண்டும்.

(5) ''பெற்றோர் பொருளை அறம்செய்வது வழக்கமாயின் வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல் எதற்கு ?''

இதற்கு முதற் கேள்விக்குரிய விடையே சாலும். வரை விடை வைத்துப் பொருள் வயிற்பிரிதல் களவொழுக்கத்தில் - கற்பொழுக்கத்திலும் பொருள் வயிற்பிரிதல் உண்டு. இப்பிரிவு நிகழ்ந்தே ஆகவேண்டும் என்பதில்லை.

(6) மாடலன் கவுந்தி கண்ணகியுடன் வந்த கோவலனைச் 'செல்லாச் செல்வன்' என்றது பொருந்துமா ?

மாடலன் செல்லாச் செல்வன் எனக் கோவலனைக் கூறியது அவன் கண்ட செல்வ மிகுதியை உணர்த்தியதாகும். அத்தகைய செல்வனாகிய நீ இன்று இந்நிலையெய்தக் காரணம்,

> ''இம்மைச் செய்தன யானறி நல்வினை
> யும்மைப் பயன்கொல் ஒருதனி யுழந்தித்
> திருத்தகு மாமணிக் கொழுந்துடன் போந்தது''

என்றான் மாடலன். அவ்வளவே.

(7) எல்லாப் பொருளும் இழந்த பின்னர்க் கண்ணகி 'சிலம்புள' என்றாளாயின் கண்ணகியைக் கொடுங்குழைமாது என அவள் காதணி கூறப்பெற்றது ஏன் ?

'கொடுங்குழைமாது' என்பது, 'கண்ணகி' என்ற பெயரை வாளா குறிப்பதேயன்றிக் 'குழையணிந்த கண்ணகி' என்று குறிப்பிடவில்லை. இதுபோலவே பாண்டியன் கண்ணகியை 'ஆயிழை' என்றதும் காணலாம். இது கவி மரபு.

கட்டுரையாசிரியர், 'சென்ற கலன்', 'பொருட் குன்றம் தொலைந்த' என்ற தொடர்களில் இலக்கணக் குறைபாடுகளாக எழுதினவும் உண்டு.

முடிவாகச் சலம்புணர் கொள்கைச் சலதி மாதவியில்லை என்ற கருத்தையே கட்டுரையாளர் குறிப்பிட்டது போற்றுதற் குரியதே.

அடுத்துக் கோவலன் பற்றிய ஆய்வு வரும்.

———

# மணிவிழாக் காணும் நாடகக் கலைஞர் தி. க. சண்முகம், எம். எல். சி. அவர்கள்

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற நாடக மன்னராகத் திகழும் அவ்வை தி. க. சண்முகம் அவர்கள் 1972 ஏப்ரல் 26ஆம் நாள் மணிவிழாக் காண இருக்கிறார். முத்தமிழில் ஒன்றான நாடகத் தமிழை ஐம்பதாண்டுகட்கு மேல் தமிழ் நாட்டில் வளர்த்து வந்தவர் அவர். தமிழ் கூறு நல்லுலகம் எங்கணும் அவர் நாடகங்கள் நடைபெற்றிருக்கின்றன. நாடகத்தை நகைச்சுவைக்காக வும் காசுக்காகவும் நடத்திவரும் இந்நாளில் நாடகத்தை நாடகத் திற்காக—நாடகத்தை நடிப்பிற் காக—நாடகத்தை நல்ல தமிழுக் காக நடத்தி வருபவர் அவர் ஒருவரே.



தம் இயல்பான நடிப்பால் தமிழ் நாடக உலகைத் தலை நிமிர்ந்து நிற்கச்செய்த அவ்வை யவர்கள் 'ஔவையார்' நாடகத் தில் ஔவையாராகத் தோன்றி ஔவையே மீண்டும் பிறப் பெடுத்து வந்ததுபோல் பாடி, பேசி, நடித்து நம் கண் முன் ஔவையை உயிரோடு நடமாடச் செய்தார். வரலாற்றுச் சிறப்புமிக்க ராஜராஜ சோழனின் வரலாற்றை நாடகமாக்கித் தமிழ்நாட்டில் வேறெந்த வரலாற்று நாடகமும் அதற்கு முன்னும் பின்னும் சிறப்பாக நடைபெற்றதில்லை யென்று பார்த்தவரனைவரும் பாராட்டும் அளவிற்குச் சிறப்பாக அதை நமக்கு வழங்கியவர் கலைஞர் டி. கே. எசு. அவர்களே.

நல்ல தமிழ்ப் பற்றும் நாட்டுப் பற்றும் மிக்க அவ்வை யவர்கள் 1912 ஏப்ரல் 26இல் திருவனந்தபுரத்தில் தி. க. கண்ணுசாமிப் பிள்ளை யவர்களுக்கும் சீதையம்மாளுக்கும் தவப்புதல்வராய்த் தோன்றினர். தம் ஆறும் அகவையிலேயே

தவத்திரு சங்கரதாச சுவாமிகளின் மதுரை தத்துவ மீனலோசனி வித்துவ பால சபையில் சேர்ந்து நடிக்கத் தொடங்கினர். அவ்வை யவர்கள் குடும்பமே கலைக்குடும்பம். அவருடைய தமையனர் திரு தி. க. சங்கரன், தி. க. முத்துசாமி அவர்களும், தம்பியார் திரு தி. க. பகவதி அவர்களும் ஆக எல்லோரும் சேர்ந்து 1925இல் பால சண்முகானந்த சபையைத் தொடங்கினர். அதுவே 1950க்குப் பின் டி. கே. எசு. நாடக சபையாகத் திகழ்கிறது.

இந்த ஐந்தாண்டுக்காலத்தில் அவ்வை யவர்கள் நடித்த சமூக, வரலாற்று நாடகங்கள் பல. நாடு விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்தபோது நாடகத்தின் மூலம் மக்களுக்கு நாட்டுப் பற்றையும் விடுதலைப் போருக்கு வேண்டிய வீர உணர்ச்சியையும் ஊட்டியுள்ளார்.

தமிழ் நாடக வளர்ச்சியை இலக்கிய வரலாற்றுச் சான்றுகளோடு ஆராய்ந்து 'நாடகக் கலை' என்ற தலைப்பில் அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நிகழ்த்தினர்.

அவ்வை யவர்களை அவ்வப்போது பல பட்டங்களும் பாராட்டுக்களும் தேடி வந்துள்ளன. எல்லாவற்றுக்கும் மேலாக மணிமுடி தரித்தது போலமைந்தது. 1971இல் இந்தியக் குடியரசுத் தலைவர் மாண்புமிகு வி. வி. கிரி அவர்கள் 'பத்மஸ்ரீ' (தாமரைச்செல்வர்) என்ற பட்டத்தைக் கலைஞருக்கு வழங்கியுள்ளார்.

நாடக உலகிலிருந்து சற்று ஓய்வுபெற்று இன்று அரசியலில் ஈடுபட்டுள்ள சிலம்புச்செல்வர் தாமரைத்திரு ம. பொ. சி. அவர்களின் வலக்கையாக, தமிழரசுக் கழகத்தின் ஆட்சித் தூணகத் திகழ்கின்றார். இதற்கு 1968இலிருந்து தமிழகச் சட்டமன்ற மேலவை உறுப்பினராக இருந்துவருவது பெருந்துணையாக இருக்கிறது.

வாழ்க நாடகக் கலைஞர்! சிறக்க அவர் மணிவிழா!

# வள்ளலார் திருவருள் மண்டபத் திறப்பு விழாவும் 'திருவருட்பாப் பெருந்திரட்டு' நூல் வெளியீட்டு விழாவும்

சென்னை மறைமலை யடிகள் நூல்நிலையத்தின் மேல் தளத்தில் புதிதாக அழகொழுக அமைக்கப் பெற்றிருக்கும் சொற்பொழிவுக் கூடமான 'வள்ளலார் திருவருள் மண்டபத்தை'த் தமிழகக் கல்வி அமைச்சர் மாண்புமிகு டாக்டர், நாவலர். இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., டி. லிட்., அவர்கள் 27—3—72 திங்களன்று மாலை திறந்து வைத்தார்கள். தொழிற் செல்வர் வள்ளல் நா. மகாலிங்கம், அவர்கள் இவ்விழா விற்குத் தலைமை தாங்கினர்கள்; டாக்டர் பா. நடராசன் அவர்கள் 'திருவருட்பாப் பெருந்திரட்டு' நூலை வெளி யிட்டார்கள்.

நாதசுரக் குழலிசைக் கலைஞர் திரு. வி. என். பாலசுப்பிர மணியம் குழுவினரின் மங்கல இசையுடன் விழா தொடங்கப் பெற்றது. சைதை இசைப்புலவர் கூத்தரசு அவர்கள் அருட்பா இசைக்க நிகழ்ச்சி தொடங்கியது.

வரவேற்புரை :

கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் திரு வ. சுப்பையா பிள்ளை அவர்கள் வரவேற்புரை யாற்றுகையில் வள்ளலாருக்கும் அக்கட்டிடத்திற்குமுள்ள தொடர்பை விளக்கினர்கள். "இம் மண்டபம் இம் மறைமலையடிகள் நூல்நிலையத்தில் அமைந் திருப்பது வரலாற்றுச் சிறப்புடையது. ஏனெனில் வள்ளலார் தம் ஒன்பதாவது அகவையில் முதன் முதலாகப் பேசியது இக் கட்டிடத்தில்தான். சோமு செட்டியார் வீட்டில் பேசியதாக வரலாறு உள்ளது. அவருடைய வழிவந்தவர்களிடமிருந்து இக்கட்டிடத்தை வாங்கி இந்த நூல்நிலையத்தை அமைத் தோம். இராமலிங்கரின் கொள்கைகளைப் பரப்புவதற்காகப் பொதுநிலைக் கழகத்தை நிறுவிய மறைத்திரு மறைமலையடிக ளாரின் பெயரில் அமைந்துள்ள இந்நூல் நிலையக் கட்டிடத்தில் 'வள்ளலார் திருவருள் மண்டபம்' அமைந்தது திருவருள் பேறேயாகும்.

"கழகம் பல துறைகளில் பணி புரிகிறது. புலவர்கள் படங்களைத் தொகுத்து வைத்துள்ளது. இந்நூலகம் ஆராய்ச்சி யாளர்களுக்குப் பேருதவி செய்து வருகிறது. இறந்து போகும்

பல நூல்களைக் கழகம் பதித்து வருகின்றது. இவ்வளவு இருந்தும் படிக்கும் கூட்டம் குறைந்து வருகின்றது. நூல்கள் விற்பனை இல்லை. அரசு உதவி யிருந்தால்தான் இந்நூலகம் மேலும் பல பணிகளைச் செய்யமுடியும்.''

**தலைமை உரை :**

விழாத் தலைவர் வள்ளல் நா. மகாலிங்கம் அவர்கள் வள்ளல் பெருமானின் பெருமைகளை எடுத்துக் கூறினார்கள். ''சென்ற நூற்றாண்டில் நம் தேசத்தில் தோன்றி ஒரு புதிய சித்தாந்தத்தைப் பரப்பிய வள்ளல் பெருமானின் பாடல் தொகுதி வெளியிட இந்தச் சிறந்த விழாவை ஏற்பாடு செய்திருக்கிறார்கள். மேலும் வள்ளலார் தம் இளமையில் முதன் முதலாக வந்து பேசிய இந்த இடத்திலேயே ஒரு அருமையான மண்டபம் அமைத்து இங்கேயே இந்த விழாவை ஏற்பாடு செய்திருப்பது சுப்பையா பிள்ளை எவ்வளவு விடா முயற்சி யுடையவர் என்பதையும் நீண்ட நாட்கள் திட்டமிட்டு இதைச் செய்திருக்கிறார் என்பதையும் எடுத்துக் காட்டுகின்றது.

''பல்லாயிரமாண்டுகளாக வளர்ந்திருக்கின்ற சமய நாகரிகத்தின் தொடர்புகளை நாம் நன்கு அறிந்து கொண்டால் தான் வள்ளல் பெருமானுடைய எண்ணங்களை, அவருடைய சிந்தனைகளை நாம் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

''சமய ஞானியாக இருந்த வள்ளலார் ஓர் உயர்ந்த நிலைக்கு வளர்ந்து சமயங் கடந்த ஞானியாக மாறினார்கள். உலகிலிருக்கக் கூடிய சகல சீவராசிகளும் ஒன்று ; அவை அனைத்திற்கும் நாம் அன்பு செலுத்தி அவை யெல்லாம் இன்பமாக வாழ நாம் உதவி புரிய வேண்டும் என்ற உயர்ந்த சிந்தனையை நமக்கு உருவாக்கிக் கொடுத்துச் சென்ற பெருமகனார் பெயரால் இந்த அழகிய மண்டபம் அமைந்திருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது.

''மிகச் சிறந்த முறையில் சென்ற பல ஆண்டுகளாகத் தமிழுக்குச் சேவை செய்துவரும் சுப்பையா பிள்ளை அவர்கள் என்னைத் தலைமைதாங்க அன்புடன் அழைத்ததற்குப் பாராட்டுகிறேன்''.

**நூல் வெளியீடு :**

வள்ளல் பெருமான் அருட்பாவிலிருந்து திரட்டப்பெற்ற 'திருவருட்பாப் பெருந்திரட்டு' நூலைத் தமிழ்நாடு திட்டக்குழு



வள்ளலார் திருவருள் மண்டபம்

(மறைமலையடிகள் நூல் நிலைய மாடி)

# வள்ளலார் திருவருள்மண்டபத் திறப்புவிழா
# (27-3-'72)



டாக்டர் நாவலர் நெடுஞ்செழியனவர்கள்
மண்டபத்தைத் திறந்து வைத்தல்



டாக்டர் பா. நடராசன், எம். ஏ. அவர்கள்
'திருவருட்பாப் பெருந்திரட்டு' நூலை வெளியிட்டு
டாக்டர் நாவலர் நெடுஞ்செழியன் அவர்களிடம் வழங்குதல்

உறுப்பினர் டாக்டர் பா. நடராசன் அவர்கள் வெளியிட்டு ஆற்றிய உரை: ''வள்ளலாருடைய நூல் மிகப் பெரிய நூல். 6,000 பாடல்களுக்கு மேலுள்ளது. இவ்வளவு பெரிய நூலைப் படிப்பதற்கு எல்லோருக்கும் நேரம் கிடைப்பதரிது என்று கருதி நம் பிள்ளையவர்கள் இப்பெருந் திரட்டை வெளியிட்டிருக்கின்றார்கள்.

''தேவாரத்தைத் திரட்டி அகத்தியர் வெளியிட்டதுபோல இவர்கள் இத் திரட்டை வெளியிட்டுள்ளார்கள். அகத்தியர் திரட்டு எவ்வளவு புகழ் பெற்றதோ அவ்வளவு புகழை இத் திரட்டும் பெறும்.

''அருட்பா எளிமையான பா. இவ்வளவு எளிமையான பா தமிழிலக்கியத்தில் வேறு இல்லை என்று சொல்லலாம். இரண்டாவதாக முன்னோர்கள் சென்ற வழியில் சென்று அவர்கள் கருத்துக்களை விரித்துக் கூறியுள்ளார் வள்ளலார். அருட்பாவில் இலக்கியச் சுவை நிறைந்துள்ளது. சமரசக் கருத்துக்கள் நிறைந்துள்ளன.

''வள்ளலாரின் அருட்பாவைப் பிரித்து ஒரு தமிழிலக்கியம் இருக்குமானல் அந்த இலக்கியம் ஓர் அரைகுறையான இலக்கியமாகத்தான் இருக்கும். வள்ளலார் நூலை எடுத்து விடுவோமென்றல் பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியத்தில் பெரும் பகுதியை எடுத்தது போலாகும்.

''புதுமைக்குப் புதுமையாகப் பல அரிய கருத்துக்கள் இத் திருவருட்பாத் திரட்டில் உள்ளன. இலக்கியப் பயிற்சி இல்லாதவர்களுக்குக் கூட இப்பாடல்கள் இன்ப மூட்டுபவை. இந் நூல் உள்ளும் புறமும் மிக அழகாகக் கட்டடம் செய்யப்பட்டுள்ளது. வள்ளலார் வழிபட்டு இதுவரை வெளிவராத பல திருக்கோயில்களின் படங்கள் இத்திரட்டில் சேர்க்கப் பெற்றுள்ளது இந் நூலின் பெருஞ் சிறப்பாகும்.''

மண்டபத் திறப்புரை :

வள்ளலார் திருவருள் மண்டபத்தைத் திறந்து வைத்து மாண்புமிகு கல்வியமைச்சர் டாக்டர், நாவலர் நெடுஞ்செழியன் அவர்கள் பாராட்டிப் பேசியது :

''எல்லோருடைய உள்ளத்தையும் கொள்ளை கொண்ட வள்ளலாரவர்கள் பேசிய இல்லத்தை வாங்கி, சீர்படுத்தி, செம்மைப்படுத்தி, உயர ஓங்குகிற அளவுக்காக்கி இம் மண்டபத்தை அமைத்து இதைத் திறந்து வைக்கிற வாய்ப்பையும்

எனக்கு அளித்துள்ளார்கள். வள்ளலார் முதன் முதலில் பேசிய இல்லத்தை வாங்கி அதில் மறைமலையடிகள் நூல் நிலையத்தை நிறுவி அந்நூல்நிலையத்தின் அருமை பெருமை களையும் அந் நூல்நிலையத்தின் உருவான பலன்களையும் தமிழகம் மிகச் சிறப்பாகப் பெறவேண்டுமென்று பெரு எண்ணங்கொண்டு அதை இந்த இல்லத்தில் அமைத்திருப்பது மிகமிகப் பாராட்டுதற்குரிய தொன்று. அதோடு மட்டு மல்லாமல் அவர்கள் பெரிதும் முயன்று இங்கே ஓர் அழகான மண்டபத்தையும் உருவாக்கி அந்த மண்டபத்திற்கு வள்ள லாரின் பெயரை இட்டு 'வள்ளலார் திருவருள் மண்டபம்' என்ற இதைத் திறந்து வைக்க வாய்ப்புக் கிடைத்ததற்கு நான் பெருமகிழ்ச்சி யடைகிறேன்.

'அந்தணர் என்போர் அறவோர்மற் றெவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டொழுக லான்'

என்ற எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் தன்மையை இலக்கணமாக வள்ளுவர் வகுத்தாரென்றால் அந்த இலக் கணத்திற்கேற்ற இலக்கியமாய்த் தான் வாழ்ந்து காட்டி அந்த அளவுக்குப் பிறரும் வாழவேண்டும் என்று வற்புறுத்தும் தன்மையை வள்ளலாரின் எடுத்துக் காட்டுகளில் காணலாம். அந்த அளவுக்கு வள்ளலார் அவர்கள் அருளுள்ளம் கொண்டு அன்புள்ளம் கொண்டு அறநெறி தழைக்க தம்முடைய நேரம், பொருள், ஆற்றல் ஆகிய அத்தனையையும் பயன்படுத்தி வந்தார்கள் என்பதை அவர் எடுத்துச் சொல்லியிருக்கின்ற கருத்துக்களிலிருந்து காணலாம். சிந்தையையும் இதயத் தையும் சேர்த்துக் கவர்கின்ற வன்மை எல்லோருக்கும் வராது. அத்தகைய ஆற்றல் படைத்தவர் வள்ளலார். இதை அவ ருடைய அருட்பாவில் காணலாம். சொல்லுக்குச் சொல் சுவை யேற்றிப் பொருளுக்குப் பொருள் ஒளியூட்டி அந்தப் பாக்களை இயற்றுகின்ற தன்மையை வள்ளலாரிடத்தில் மிகச் சிறப்பாகக் காணுகின்ற காரணத்தால்தான் வள்ளலார் எல்லோருடைய உள்ளத்திலும் குடிகொண்டிருக்கிறார்.

''இருப்பினும் அவர் காட்டிய அருள்நெறியை, அன்பு நெறியை எல்லோரும் கடைப்பிடிக்கிறோமா என்பது கேள்விக் குரியதுதான். அந்தக் கருத்துக்களுக்கு மதிப்பளித்து அவற்றின் வழிச் செல்ல வேண்டுமென்று வந்தவர்களுடைய எண்ணிக்கை எவ்வளவு என்று பார்க்கின்றபோதுதான் வருத்தமா யிருக்கிறது. அந்தக் கருத்துக்களுக்கும் இதயத் திற்கும் தொடர்பில்லாத அளவோடு அந்தக் கருத்துக்

களுக்கும் செவிகளுக்கும் தொடர்புண்டு—கருத்துகளுக்கும் உதட்டுக்கும் தொடர்புண்டு—கருத்துகளுக்கும் எழுதுகின்ற பேனாவிற்கும் தொடர்புண்டு—ஆனால் அந்தக் கருத்துக் களுக்கும் இதயத்திற்கும் தொடர்பு இல்லை என்பது தான் வாழ்க்கையில் நடந்து காட்டுகிற முறைகளாக இருக்கின்றன.

''மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்திறன்' என்ற வள்ளுவர் வாக்குப்படி வள்ளலார் வாழ்ந்தார் என்பதை அவருடைய வாழ்க்கை வரலாற்றிலிருந்து காண முடிகிறது.

''எந்தக் கருத்துக்கும் மதிப்பு இல்லாவிட்டால் அக்கருத்து நிலைபெறாது. ஆகவே தான் இத்தகைய கருத்துக்களைப் படித்துப்படித்து நெக்குருகி நெக்குருகி கல்நெஞ்சமும் கரையத் தக்க அளவுக்கு வன்னெஞ்சமும் மாறத்தக்க அளவுக்கு அழாத உள்ளங்களை யெல்லாம் அழவைக்கிற அளவுக்கு உருகாத உள்ளங்களெல்லாம் உருகத்தக்க அளவுக்கு அன்பினைப் பிலிற்ற முடியாத உள்ளங்களெல்லாம் அன்பினைப் பீலிற்றச் செய்யுமளவுக்குக் குழையாத உள்ளங்களை யெல்லாம் குழையத் தக்க அளவுக்கு அருள் பெறாத உள்ளங்களெல்லாம் அருள் பெறத் தக்க அளவுக்கு எப்படிப்பட்ட இனிய எளிய அழகிய கவரத்தக்க சொற்களால் சொன்னால் அந்த அளவுக்கு இதயம் கரையும், உள்ளம் பண்படும் என்று கருதி அப்படிப்பட்ட சொற்களாலே தம்முடைய கருத்துக்களத்தனையும் எடுத்து வைத்த பெருமை வள்ளலார் அவர்களுக்குண்டு. ஆகவே தான் அவர் அரும்பெருங் கருத்துக்களைத் தொகுத்துப் பெருந் திரட்டாக வெளியிட்டுள்ள திரு சுப்பையா பிள்ளை அவர்களைப் பாராட்டுகிறேன்.

''அவர்கள் பெருமுயற்சி யெடுத்துத் தமிழ் ஆக்கம்பெற ஊக்கம்பெற தமிழ் மிகச் சிறப்பான ஏற்றம் பெறுதற்கான அரும்பெரும் பணிகளை மிகச் சிறப்பாக அவர்கள் ஆற்றி வருகிறார்கள் என்பதைப் பலமுறை நான் எடுத்துச் சொல்லிப் பாராட்டியிருக்கிறேன்.

''அவர்கள் நான் 1965இல் எழுதியதைச் சுட்டிக் காட்டினார்கள். நூல் நிலையம் மேன்மேலும் வளர்ந்து அழியாப் புகழோடு என்றென்றும் நிலைபெற்று நிற்கத்தக்க வகையில் அரசினரின் அரவணைப்பும் உதவியும் என்றென்றும் இருக்க வேண்டும் என்று சொன்னேன். இன்றுஞ் சொல்லுகிறேன், என்றுஞ் சொல்லுவேன். ஆகவே அதிலிருந்து நான் என்றைக்கும் மாறவில்லை. நிலைபெற்று நிற்கத்தக்க அள

வுக்கு அரசின் அணைப்பும் உதவியும் என்றென்றும் இருக்க வேண்டும். ஆனால் அவ் வணைப்பும் உதவியும் எவ்வழியில் எவ்வகையில் வேண்டும் என்பதைப் பெறவேண்டிய முறையில் பெறவேண்டிய வழியில் பெறவேண்டிய வகையில் பெறுவதற்குச் சுப்பையா பிள்ளை முயலவேண்டும். அதை எந்தெந்த வகையில் கிடைக்கச் செய்ய முடியுமோ அந்தந்த வகையில் கிடைக்கச் செய்ய நானும் என்றைக்கும் ஆயத்தமாக இருக்கிறேன். அந்த அரவணைப்பும் உதவியும் இல்லா விட்டால் இத்தகைய ஆராய்ச்சிக் கூடங்கள் நிலைபெறா. இந் நிலையம் வளர வேண்டுமென்பதில் நான் அழுத்தமான விருப்பமுடையவன். சுப்பையா பிள்ளை அவர்களும் அவர்கள் அண்ணன் திருவரங்கம் பிள்ளை அவர்களும் இத்தகைய பெரும் முயற்சியை எடுக்காமலிருப்பார்களேயானால் தமிழினுடைய இவ்வளவு சிறப்பை இந்த நாடு பெறச் செய்வதற்கான உள்ளத்தைப் படைத்தவர்கள் இந்த நூற்றாண்டிலே யாரும் தோன்றுவார்கள் என்று நான் நினைக்கவேயில்லை. எந்தெந்த நூல்களை வெளியிட்டால் விலையாகும் என்கிற எண்ணம்தான் நூற்றுக்குத் தொண்ணூற்றெட்டு தொண்ணூற்றொன்பது பதிப்பாளர்களிடத்திலிருக்கக் கூடும். நம் கண்ணுக்கு எட்டாது அழிந்து போகக்கூடிய பல்வேறு தமிழ்ப் பெரும் இலக்கியங்களைக் கொண்டுவந்து தமிழனுடைய உள்ளத்தையும் தமிழனுடைய ஏற்றத்தையும் சிறப்பையும் அருமை பெருமைகளையும் என்றென்றும் உலகம் பாராட்டத் தக்க அளவுக்குப் பெரிதும் முயன்று அதனால் ஏற்படுகிற இன்னல்களை, இழப்புக்களை யெல்லாம் பொருட்படுத்தாமல் துணிவாற்றி இன்பம் தரும் வினையைச் செய்யும் நோக்கத்தோடு அவர்கள் செய்து முடித்திருக்கிற காரணத்தினால்தான் அவர்களைப் பாராட்ட நான் மிகமிகக் கடமைப்பட்டிருக்கின்றேன்.''

பாராட்டுரை :

அடுத்து மாம்பாக்கம் குருகுலம் திருக்குறள் பீடம் அழகரடிகள் ஆற்றிய சிறப்புரை :

''வள்ளலாருடைய பாடல் ஒன்றுக்குக் கருத்துத் தெரிவிக்க வேண்டும். வள்ளலாருக்கு எத்தனையோ மண்டபங்கள் இருக்கலாம். ஆனால் இதைப்போல் ஒரு விரிவுரை மண்டபம் சென்னையில் இதுவரை அமைந்ததில்லை என்றே நினைக்கிறேன். இக்கட்டிடம் சிறப்பு மிக்க கட்டிடம். பல 'முதல்'

களைப் பெற்றது. வள்ளல் பெருமான் இங்கே நிகழ்த்தியது முதல் விரிவுரையாகும். அதற்குமுன் அவர் விரிவுரை செய்த தில்லையாம். முதல் விரிவுரை என்பதோடு பெருமைவாய்ந்த பெரிய புராணத்தில் முதல் பாட்டுக்கு விரிவுரை நடந்தது. அந்த முதல் பாட்டிலும் முதல் வரிக்கு நடந்தது. அந்த முதல் வரியிலும் முதல் சொல்லுக்கு நடந்தது. 'உலகெலாம்' என்னும் அந்த முதல் சொல்லுக்கே நேரமாகி விட்டது. இவ்வாறு பல முதல் சிறப்புக்களுக்கு இம்மண்டபம் பெயர் பெற்றிருக்கிறது.

''வள்ளல் பெருமான் சிறந்த அருள் வள்ளல், இலக்கிய வள்ளல், இலக்கண வள்ளல், கலை வள்ளல், பொருள் வள்ளல் ஆவார்கள். வள்ளல் என்று பெயர் பெற்றவர் பலர். ஆனால் இன்று வள்ளலார் என்றால் இராமலிங்க சுவாமிகளையே குறிக்கும்.

''வள்ளற் பெருமான் இவ்வளவு நிலைபெற்றிருப்பதற்குக் காரணம் அவர் செய்த கருத்துப் புரட்சி. அவர் கொடுத்த திருவருட்பா என்ற நூல் ஒரு வள்ளண்மைதான். ஆனாலும் அதில் உள்ள கருத்துக்களுக்காகத்தான் அது போற்றப் பெறு கின்றது. அவர் கூறிய ஒரே கருத்து சன்மார்க்கம் என்பது தான்.

''விழாத் தொடங்குவதற்குமுன் திரு. வ. சுப்பையா பிள்ளையவர்களைக் கண்டதும் தாங்கள் வெளியிடவிருக்கும் 'திருவருட்பாப் பெருந்திரட்'டில் ஒரு பாட்டின் முதலடியைச் சொல்லி, அப்பாட்டு இருக்கிறதா என்று கேட்டேன். உடனே புத்தகத்தை எடுத்துச் செய்யுள் முதற்குறிப்பகரவரிசையில் அப்பாட்டு இருக்கிறதென்று எடுத்துக்காட்டி எனக்குப் பெரு மகிழ்வூட்டினார்கள். அஃதொன்றினாலே இப் பெருந்திரட்டு மிகப்பெருமை வாய்ந்ததும் பயனுடையதுமாகும் என்று துணிந்து கூறுகின்றேன்.

''வள்ளலார் மண்டபம் மறைமலையடிகள் நூல்நிலையத்தின் மேல் அமைந்திருப்பது பொருத்த முடையது. ஏனெனில் வள்ளலாரின் அருட்பாவைப் பற்றி வாதங்கள் ஏற்பட்டபோது வள்ளலார் பக்கம் நின்றவர் மறைமலையடிகள். அத்தகைய சிறப்புமிக்க இம்மண்டபம் சிறக்க வாழ்த்துகிறேன்.''

கழக ஆட்சியாளர் அவர்கள் நன்றி கூற விழா இனிது முடிந்தது.

## மறைமலையடிகள் நூல் நிலையத்திற்கு நூல்கள் அன்பளிப்பு

தமிழ்நாட்டில் நல்ல தமிழ்நூற் கருவூலமாகத் திகழும் மறைமலை யடிகள் நூல்நிலையத்திற்கு அன்பர் சிலர் அண்மையில் தாம் சேர்த்து வைத்துள்ள அரிய நூல்களை அன்பளிப்பாக வழங்கியுள்ளனர்.

திருச்சித் தமிழறிஞரான **பொன்னுசாமிப் பிள்ளையவர்களின்** மகனாரும் செட்டிநாட்டரசர் முத்தைய செட்டியார் அவர்களுடன் பயின்றவரும் அவர் தம் உழுவலன்பருமாய **திரு பொ. மாணிக்கவாசகம் பிள்ளை** அவர்கள் தமிழைச் சிறப்பாகப் பயின்றவர். இரயில்வேத் துறையில் பணியாற்றி ஓய்வுபெற்ற இவர்கள் பழைமையான தமிழ் நூல்களைத் தொகுத்து மிக அருமையாகப் பாதுகாத்து வைத்திருக்கின்ருர்கள். திருச்சித் தமிழ்ச் சங்கம் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தவர்கள் இவர்கள்தாம். அச்சங்கத்திற்கு ஒரு பேழையும் அது நிறையப் புத்தகங்களும் அன்பளிப்பாக அளித்துள்ளார்கள்.



கழக ஆட்சியாளர் அவர்கள் அண்மையில் திருச்சிக்குச் சென்றபோது பிள்ளையவர்களுடன் ஆட்சியாளருக்குத் தொடர்பு ஏற்பட்டது. அவர்கள் மறைமலையடிகள் நூல்நிலையத்தின் பெருமையை எடுத்துக் கூறி அதற்காகப் பல்வேறு மலர்களும் அரிய நூல்களும் வேண்டுமென்று கூறினுர்கள். உடனே அவர்கள் மலர்களைத் தொகுப்பது தாம் நீண்ட நாட்களாகச் செய்துவரும் விருப்பப்பணி என்று கூறிப் பல மலர்களை எடுத்துக் காட்டினுர்கள். பத்துக்கு மேற்பட்ட மலர்களையும் உடனே எடுத்து நூல் நிலையத்திற்காகக் கொடுத்தார்கள். பல அரிய நூல்களைப் பின் அனுப்பிவைப்பதாகவுங் கூறினுர்கள்.

அவ்வாறே 15-3-72 அன்று 70 அரிய நூல்களைச் சரக்குந்து வழி அனுப்பிவைத்தார்கள். அவற்றிற் புராணங்களும் சிற்றிலக்கிய நூல்களுமே மிகுதியாக உள்ளன.

நூல்நிலையத்தில் இல்லாத ஐந்து புராண நூல்களை அவர்கள் அனுப்பியிருந்தனர். அவர்கட்கு நூல் நிலையத்தாரின் நன்றி என்றென்றும் உரித்தாகுக. அண்மையில் அவர்கள் சென்னைக்கு வந்து நூல் நிலையத்தைப் பார்வையிட்டபோது மேலும் பல அரிய நூல்களை அவர்கள் அளிப்பதாகக் கூறி மகிழ்வூட்டினுர்கள்

அவ்வாறே வேறு சில அன்பர்களும் அவ்வப்போது சில நூல்களை நூலகத்திற்கு அன்பளிப்பாக அளித்துள்ளார்கள்.

'உலகம் சுற்றிய முதல் தமிழர்' திரு ஏ. கே. செட்டியார் அவர்கள் பல மலர்களையும் இதழ் தொகுப்புக்களையும் கொடுத்துள்ளார்கள். அண்மையில் 'சக்தி-1 தொகுதி ஆனந்தவிகடன் 1932, 33, 34 ஆண்டுத் தொகுதிகள், காந்தியடிகள் தம் கருத்துக்களை எழுதிவந்த 'Harijan' தொகுதி ஒன்று, 'தமிழ் ஹரிஜன்' 2 தொகுதிகள் முதலியவற்றை அளித்துதவினுர்கள்.

அருட்பாவை வெளியிட்ட திரு ஆ. பாலகிருட்டிண பிள்ளையவர்களின் திருமகளார் திருவாட்டி ஆனந்தாதேவி அவர்கள் அண்மையில் நூல் நிலையத்தில் நடைபெற்ற 'திருவருட்பாப் பெருந்திரட்டு' வெளியீட்டின் போது காட்சிக்காக வள்ளலாரைப் பற்றிய 40 சிறு நூல்களும் வள்ளலாரைப்பற்றிய துண்டு அறிக்கைகளும் கொடுத்துதவினுர்கள்.

திரு 'சோமலெ' அவர்கள் அவ்வப்போது சில மலர்களையும் நூல்களையும் நூலகத்திற்கு வழங்கியுள்ளார்கள். இவர்களனைவருக்கும் நூலகத்தாரின் பெருநன்றி உரித்தாகுக.

---

## மறைமலையடிகள் நூல் நிலையத்தில் மலர்கள் தொகுப்பு

கடந்த ஐம்பதாண்டுக் காலமாகத் தமிழகத்தில் பல்வேறு சமயங்களில் பலவகையான மலர்கள் வெளிவந்துகொண்டிருக்கின்றன. பேரறிஞர்கள், புலவர்களின் மணிவிழா, வைர விழாக்களின்போதும் அவர்களின் பிரிவின்போதும் மலர்கள் வெளியிடப்பெறுகின்றன.

தமிழ்ச் சங்கங்கள், பள்ளிகள், கல்லூரிகள் போன்ற நிலையங்கள் ஆண்டுதோறும் மலர்கள் வெளியிடுவதோடு 25, 50, 60, 100 ஆண்டுகள் நிறைவின்போது வெள்ளி விழா, பொன் விழா, வைர விழா, நூற்றாண்டு விழா மலர்களை வெளியிடுகின்றன.

இவை தவிர இறைவன் குடிகொண்டுள்ள திருக்கோயில்களின் குடமுழுக்கின்போதும் ஆண்டுப் பெருவிழாவின்போதும் பல மலர்கள் வெளிவருகின்றன.

இவ்வாறு வெளிவரும் மலர்களில் பெரும்பாலும் விளம்பரங்களே இருக்குமெனினும் பல அரிய சிந்தனைக்குரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள், கருத்துக்கள் பயனுள்ள செய்திகள் வெளிவந்துள்ளன. இம்மலர்களில் வெளியாகும் சீரிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் அனைத்துமே நூல் வடிவில் வெளிவந்துவிடுவதாகக் கூற இயலாது. இத்தகைய கட்டுரைகள்

என்றுமே குடத்திலிட்ட விளக்காகவே மறைந்துபோகும். கட்டுரைகள் நூல் வடிவில் வெளிவராதவரை நிலைபெறுவதில்லை. மலர்கள் நூல் போல் உருவாக்கப்பெற்றாலும்கூடக் குறிப்பிட்ட ஒரு நாளையோ அல்லது ஒரு காலத்தையோ குறிக்க அவை வெளிவருவதால் தம் பெயருக்கேற்ப மலராகவே இருந்து வாடி வதங்கி மங்கிப்போய்விடுகின்றன.

நூல்களைத் தொகுத்துவைப்பவரே இல்லாத இக்காலத்தில் மலர்களை யாரே தொகுத்துவைப்பர்? அப்படியிருந்துவிடினும்கூட அதிலுள்ள தேன்துளி போன்ற கட்டுரைகளை யார் படிக்கப் போகின்றனர்?

இந்நிலையில்தான் மலர்களுள் பொதிந்துள்ள தேன் துளிகளான கட்டுரைகளைத் தொகுத்துப் பட்டியெடுத்து எல்லோர்க்கும் அளிக்க வண்டு போன்ற பணியில் மறைமலையடிகள் நூல்நிலையம் மிக்க விழிப்புடன் ஈடுபட்டுள்ளது.

பல்வேறு துறைகளில் ஆராய்ச்சி செய்யப் புகுகின்றவர்களுக்கு இம்மலர்கள் கிடைப்பதில்லை- கிடைத்தாலும் இதனுள் எது இருக்கும் என்று தெரிதற்கு வாய்ப்பில்லை அதனால் பல அரிய கருத்துக்கள் ஆராய்ச்சியாளர்களின் பார்வைக்கே கிடைக்காமற் போய்விடுகின்றன.

அதனால் முதற்கண் தற்பொழுது கிடைக்கக்கூடிய மலர்களையெல்லாம் தொகுத்து ஓரிடத்தில் சேர்க்கும் பணியில் நூலகம் ஈடுபட்டுள்ளது. நூலகத்தில் ஏற்கெனவே 418 மலர்கள் உள்ளன. மலர்களைத் தொகுக்கவேண்டும் என்ற முயற்சியைக் கடந்த ஓரிரு மாதங்களுக்கு முன் அக்கறைகொண்டு எடுத்தபின் ஏறத்தாழ 200 மலர்கள் புதியவாகக் கிடைத்திருக்கின்றன.

இவற்றினின்றும் பயனுள்ள கட்டுரைகளின் பெயர்களையெல்லாம் தொகுத்து அவற்றைப் பொருள் வகையில் வகைப்படுத்திப் பட்டியல் ஒன்று தொகுத்தால் அஃது ஆராய்ச்சியாளர்கட்குப் பலவகையில் பயன்படும் என்பது நூல்நிலையத்தாரின் கருத்து. அவ்வாறு செய்யவும் தொடங்கி யுள்ளனர்.

எனவே ஆங்காங்குச் சில மலர்களைத் தொகுத்துவைத்திருக்கும் அன்பர்கள் மனமுவந்து தங்களிடமுள்ள மலர்களை சென்னை-1, 105, லிங்கிச்செட்டித் தெரு, மறைமலையடிகள் நூல் நிலையத்திற்குக் கொடுத்துதவ வேண்டுகிறோம். அனுப்புவதற்கு முன் நூல்நிலையத்திற்குத் தங்களிடமுள்ள மலர்களின் பெயர்களை விவரமாகத் தெரிவித்தால் நூல்நிலையத்தில் இல்லாத மலர்களை மட்டுமே பெற்றுக் கொள்ள எளிதாக இருக்கும்.

கழகம் அமைக்கும் நூற் காட்சியில் மலர்களைத் தனிப்பிரிவாக அமைக்கவும் விரும்புகிறோம். எனவே இப்பயனுடைய பணிக்கு ஒல்லும் வகையில் உதவுமாறு தமிழ் அன்பர்களையும் அறிஞர்களையும் வேண்டுகிறோம்.

—இரா. கல்யாணசுந்தரம்.

———

# இறைமையில் இசைந்த வாழ்வு

[திரு. மா. சண்முக சுப்பிரமணியம்]

13

## இறையுணர்வால் எய்தும் நலன்கள்

**இதுவரை நாம் கண்டது :**

தான் பிறந்து வாழும் இப்பரந்த உலகத்தை மனிதன் பார்க்கிருன்; ஞாயிற்றையும் திங்களையும், எல்லையில்லாப் பரவெளியையும் எண்ணிலா விண்மீன்களையும் பார்த்துப் பார்த்து அவன் வியக்கின்ருன்.

இயற்கையின் எழிலார்ந்த இத் தோற்றம் மனிதனின் இதயத்தை நெகிழ்விக்கின்றது.

மனிதன் ஆறறிவு பெற்றவனன்ருே? எனவே, விண்ணின் மீன்களுக்*கும், மண்ணின் மலர்களுக்கும் இடையுள்ள இணைப்பை அவன் உணர்கின்ருன். சூரியனும் சந்திரனும், சூழ்ந்துள்ள கோளங்களும், எண்ணிலடங்கா எத்தனையோ அண்டங்களும் அணுவளவும் தவருது அசைந்தாடும் ஆட்சியிலே காலங்கடந்து நிற்கும் இக் காட்சியின் மாட்சியிலே, அமைந்து விளங்கும் ஆற்றலை அறிவார்ந்த மனிதனின் அகவுணர்வு காட்டுகிறது. தன் அறிவுகொண்டு இவ்வாற்றலை அளக்க முயலுகின்ருன் மனிதன்; அவனுல் இயலவில்லை; அதன் மாட்சியை மதிப்பிட முனைகின்ருன், முடியவில்லை. எத்தனையோ காலமாக எத்தனையோ வழிகளில் எவ்வாறெல்லாமோ முயன்று பார்த்ததன் பயனுக அவன் ஒருண்மையை உணருகின்ருன். அவ்வாற்றல் தன் அறிவுக்கு அப்பாற்பட்டது என்ற உண்மை அவன் உள்ளத்தில் உதித்ததும் மனிதன் புத்துணர்வு பெறுகின்ருன். இந்த உண்மையுணர்வு பெற்ற மனிதன், காலமும் அறிவும் கடந்துள்ளதைக் "கடவுள்" என்று குறித்து, எல்லாவற்றிற்கும் மூலமான அதனை இறைமை எனக் கண்டு போற்றினுன்.

இவ்வாறு, எல்லாமாகி எங்கும் நிறைந்த இறைமையைப் போற்றி நிற்கும் மனிதனின் உள்ளத்திலே உண்மை ஒளி தோன்றுகிறது. போற்றப்படும் மெய்ப்பொருளும் போற்றி நிற்கும் தானும் வேறல்ல என்ற பேருண்மையை அவன்

உணர்கின்ருன். உலகும், உலகத்து உயிர்களும், பரவெளியில் நின்ருடும் பல்கோடி அண்டங்களும், இவற்றையெல்லாம் இணைத்து எண்ணும் இதயம் படைத்த தானும், இறைமை என்ற முதலும் முடிவுமற்ற மூலப்பொருளில் முகிழ்த்தவை தாம்என்ற மெய்யுணர்வு மனிதனின் மனத்திலே மலர்கின்றது.

இவ்வாறு, மருள் நீங்கிய மாசறு காட்சியால் இருள் நீங்கி இன்பம் பெறுகிருன் மனிதன். இந்த மெய்யுணர்வே மனிதனை மாண்புறச் செய்கின்றது.

இதுவரை நாம் கண்டதன் சாரம் இதுவேயாகும்.

**இறையுணர்வால் எய்தும் பயன் என்ன ?**

இத்தகைய மெய்யுணர்வினுல்—நாம் எய்தும் பயன் என்ன ?

இவ்வுலக வாழ்விற்கு இறையுணர்வு எவ்வகையில் உதவு கிறது ?

இறையுணர்வு இல்லாத வாழ்க்கை இயலாதா ?

இவ்வினுக்களுக்கு நாம் விடைகள் காண வேண்டும்.

உண்மையிலேயே, நம் வாழ்வில் இறையுணர்வால் எய்தும் நன்மை ஏதும் இல்லை என்ருல், ''இறைமை'' என்றும் ''இறையுணர்வு'' என்றும் பேசுவது வீணேயன்ருே ?

எனவே, இறையுணர்வு எவ்வகையில் நாம் வாழ்வாங்கு வாழ்வதற்கு இன்றியமையாதது என்பதுபற்றி நாம் ஆய்ந் தறிய வேண்டியவர்கள் ஆகின்ருேம்.

**அனைத்தின் பயன் அனுபவமே :**

எத்தகைய கல்வியாலும் எத்தகைய செல்வத்தாலும், எவ்வகை முயற்சியாலும் எவ்வகைச் செயலாலும் நாம் அடையும் பயன் ''அனுபவம்'' என்ற ஒன்று தான். ஆங்கி லத்தில் இதனை ''Experience'' என்பார்கள்.

ஒருவன் பல நூல்களைக் கற்றவன், மற்ருெருவன் எழுதப் படிக்கவும் தெரியாதவன், எதையும் கல்லாதவன். இவர்கள் இருவருக்கும் உள்ள வேறுபாடு என்ன ? முன்னவன் பல நூல்களைக் கற்றதனுல் பெற்ற அனுபவத்தை உடையவன், கல்லாதவனே அத்தகைய அனுபவம் இல்லாதவன்.

கல்வியால் பெறும் அனுபவமே இருவரிடையுள்ள வேறு பாடாகும்.

ஒருவன் செல்வன், மற்ருெருவன் வறியவன். அரண்மனை போன்ற வீடும் அதற்கேற்ற நுகர் பொருள்களும், வங்கியில் பணமும், வற்ருத வளமும் பெற்று ஒருவன் வாழ்கின்ருன். இவையேதும் இன்றி ஏழையாக இருக்கின்ருன் இன்னெருவன். இவர்களுக்குள் நிலவும் வேறுபாடு என்ன? அனுபவந்தான். வளத்தோடு வாழும் அனுபவம் ஒருவனுக்கு! வறுமையில் வாடும் அனுபவம் மற்ருெருவனுக்கு!

வெளிநாடுகள் பலவற்றுக்கும் சென்று திரும்பியுள்ளான் ஒருவன். அவனுக்கும் வெளிநாடுகள் சென்றிராத மற்ருெரு வனுக்கும் உள்ள வேறுபாடு என்ன? வெளிநாடுகளைக் கண்டதால் உள்ள அனுபவம் ஒருவனுக்கு உள்ளது. மற்ற வனுக்கு இல்லை என்பதுதான் வேறுபாடு.

பிறவிக்குருடன் ஒருவன் என்ருல் அவனிடமுள்ள குறைபாடு என்ன? இந்த உலகத்தையும் உலகப் பொருள் களையும் கண்டு அனுபவிக்க இயலாதவன், அந்த அனுபவம் இல்லாதவன் என்பதுதான். செவிப்புலன் வழியால் அமையும் அனுபவத்தைப் பெருத குறையே பிறவிச்செவிடனின் குறைபா டாகும்.

இவ்வாறு, அனுபவத்தால்தான் மக்கள் வேறுபடு கின்றனர். மக்களிடையுள்ள வேறுபாடுகள் இந்த அனுப வத்தின் அடிப்படையிலேயே அமைகின்றன.

**அனுபவமும் அதன் விளைவும்:**

கல்வி அனுபவம் பெருத ஒருவனிடம் கவிநயம் மிக்க ஒரு கவிதையைக் காட்டினுல் பயன் என்ன? கல்வி அனுபவம் இல்லாததால் கவிதை நயத்தை அவனுல் காண முடியவில்லை. கல்வி அனுபவம் பெற்றவனே கவிதை நயத்தைச் சுவைத்துப் போற்றுகிருன்.

அடுக்கு மாளிகைக் கட்டிடங்கள் அடர்ந்துள்ள வெளி நாடுகளுக்குச் சென்று திரும்பிய ஒருவனுக்குச் சென்னையி லுள்ள ஏழடுக்குக் கட்டிடம் எவ்வித வியப்பையும் அளிப்ப தில்லை. ஏன்? வானளாவும் மாளிகைகள் பலவற்றையும் பல நாடுகளிலும் பார்த்துப் பழகியதால் ஏற்பட்ட அனுபவம் அவனுக்கு இருக்கிறது. எனவே, ஏழடுக்குக் கட்டிடத்தைக் காணும்போது அவனுக்கு வியப்பு ஏற்படவில்லை. ஆனுல்

சிற்றூரிலிருந்து சென்னைக்கு முதன் முதலாக வரும் ஒருவன் சென்னையிலுள்ள ஏழடுக்குக் கட்டிடத்தைக் கண்டதும் பெரு வியப்பு எய்துகிறான். ஏனெனில், இத்தகைய கட்டிடங்கள் கண்ட அனுபவம் அவனுக்கு இல்லை. இவ்வாறு, ஓங்கி உயர்ந்த கட்டிடங்களைப் பார்த்துப் பழகியதால் ஏற்பட்ட அனுபவம் உடையவனும், அத்தகைய அனுபவம் இல்லாத வனும் ஒரே பொருளைக் கண்டாலும், அதனால், வெவ்வேறான உணர்வுகளைப் பெறுகின்றனர்.

கடல் கடந்து செல்லும் கப்பல்களில் பலமுறை பயணம் செய்த ஒருவனிடம் மதுராந்தகம் ஏரியைக் காட்டினால் அதன் பரப்பினைக் கண்டு அவன் மலைத்துவிடமாட்டான். ஆனால், சிறு குளங்களை மட்டுமே கண்ட ஒருவன் பரந்து கிடக்கும் அந்த ஏரியினைக் கண்டு வியப்படைகிறான். காரணம், பரந்த கடலினைக் கண்டு பழகிய அனுபவம் ஒருவனுக்கு உள்ளது. அத்தகைய அனுபவம் மற்றொருவனுக்கு இல்லை.

இவ்வாறு, ஒரே காட்சியின் விளைவு அதைக் காண்போரின் முன் அனுபவத்திற்கு ஏற்ப வெவ்வேறு வகையில் அமை கின்றது.

எனவே, நம் வாழ்வில் நிகழும் ஒவ்வொன்றின் விளைவு களும் நமக்குள்ள அனுபவத்துக் கேற்பவே அமைகின்றன என்பது தெளிவாகும்.

**இறையுணர்வு என்பது ஓர் ஈடில்லா அனுபவம்:**

அனைத்தின் பயனும் நாம் பெறும் அனுபவந்தான் என்றும், அந்த அனுபவத்திற்கு ஏற்பவே பிற நிகழ்ச்சிகளின் விளைவுகள் உள்ளன என்றும் கண்டோம்.

அனைத்தின் பயனும் அனுபவந்தான் என்றால் இறை யுணர்வு என்பதும் ஓர் அனுபவந்தானே? எனில், இறை யுணர்வால் நாம் எய்தும் அனுபவம் எத்தகையது? அத்தகைய அனுபவத்தால் விளையும் பயன் என்ன?

உண்மையில் இறையுணர்வு என்பது ஒப்புயர்வற்ற ஓர் அனுபவமாகும். அந்த அனுபவத்திற்கு ஈடாகவோ இணை யாகவோ எதனையும் நாம் கூற இயலாது. நம் ஐம்புலன்களால் புறப்பொருள்களை நுகர்ந்து பெறும் எத்தனையோ வகைப் பட்ட அனுபவங்களையெல்லாம் விட, அகவுணர்வால் நாம் எய்தும் இறையுணர்வு என்ற அனுபவம் மிக மிக உயர்ந்தது. எனவேதான், இறையுணர்விலே தோய்ந்து ஏற்றமுற்

ரோர்களை 'அனுபூதிமான்கள்' என்று நாம் சிறப்பித்துக் கூறு கின்ரேம்.

இயற்கையில் இலங்கிடும் இறைமையும் அதனை எண்ணிப் பார்க்கும் நாமும் இரண்டாக இருந்தாலும், இணைந்தே உள்ளோம் என்று மெய்யுணர்வால், இரண்டற உணரும் நிலையினை ''அத்துவித அனுபவம்'' (இரண்டற உணரும் அனுபவம்) என்று கூறுகின்றனர் ஞானிகள். இறைமையும் நாமும் இரண்டற உள்ளோம் என்பதை உணர்ந்ததும் இறைமையை நாம் முழுதுமாக அறிந்து கொள்கின்ரேமா? இல்லை. இறைமையைப் போற்றும் மறைகள் எல்லாம், ''இன்னமும் அறியோம்'', ''இன்னமும் அறியோம்''; என்று கூறுகின்றனவாம்!

*''அத்துவித அனுபவத்தை அனந்தமறை இன்னமின்னம்*
*அறியேம் என்னும்*
*நித்தியத்தை..................................*

*—தாயுமானவர்*

இறையுணர்வு பெறவேண்டுமென்ற மெய்ஞ்ஞான விருப்பங்கொண்டு, கேள்வி ஞானத்தை நாடி, வேறு இச்சைகளை விட்டு, அஞ்ஞானம் அகன்று, உண்மையை அறிந்து, இறைமையும் தானும் இரண்டன்று என்ற மெய்ஞ்ஞானம் பெற்று, ஐயப்பாடுகளெல்லாம் அறத்தெளிந்த சான்ரோர்கள் பெறும் இறையுணர்வு ''கண்டும் காணேன்'' என்கின்ற அனுபவமாகவே இருக்கின்றதாம்!

*''மெய்ஞ்ஞான விருப்பத்தில் ஏறிக் கேள்வி*
*மீதேறித் தெளிந்திச்சை விடுதல் ஏறி*
*அஞ்ஞான மற்றபடி ஏறி உண்மை*
*அறிந்தபடி நிலை ஏறி அதுநான் என்னுங்*
*கைஞ்ஞானங் கழன்றேறி மற்ற எல்லாங்*
*கடந்தேறி மவுனவியற் கதியில் ஏறி*
*எஞ்ஞானம் அறத்தெளிந்தோர் கண்டுங் காணேம்*
*என்கின்ற அனுபவமே இன்பத் தேவே.''*

*—திருவருட்பாப் பெருந்திரட்டு*

எனவே, இறையுணர்வு என்பது ஓர் அனுபவம்—அத்து வித அனுபவம், எனினும், அது முற்றுப் பெருததோர் அனு பவம் என்றும், ''கண்டுங் காணேன்'' என்கின்ற அனுபவம் என்றும், அந்த அனுபவத்தில் தோய்ந்த அடியார்கள் கூறு கின்றனர்.

இத்தகைய, இறையனுபவத்தின் தனிப் பண்பையும் பயனையும் இனிக் காண்போம்.

# செய்திகளும் குறிப்புக்களும்

## 'மிதக்கும் பல்கலைக் கழகம்'

அலைகடலில் மிதக்கும் 'யுனிவர்ஸ் காம்பஸ்' என்ற அழகிய கப்பல் மிதக்கும் பல்கலைக் கழகமாகும். 2—4—72இல் சென்னைக்கு வந்திருந்த இக் கப்பல் தன்னகத்தே ஒரு பல்கலைக் கழகத்தையே கொண்டுள்ளது.

12 வகுப்பறை, ஓர் அறிவியல் ஆய்வுக்கூடம், 200 பேர் இருக்கக் கூடிய திரை அரங்கு, 18 படுக்கைகள் கொண்ட மருத்துவமனை, அரிய நூல்கள்கொண்ட நூலகம், 850 படுக்கைகள் கொண்ட 310 அறைகள் இவை தவிர மாணவர்களுக்கு வேண்டிய விளையாடுமிடம், நீச்சல்குளம் போன்ற அத்தனை வசதிகளையும் கொண்ட ஒரு தனி உலகம் இக் கப்பலாகும்.

அமெரிக்காவிலுள்ள சாப்மன் கல்லூரியும் வேறு சில பல்கலைக் கழகங்களும் சேர்ந்து நடத்தும் இப் பல்கலைக் கழகம் 86 வகையான பாடத் திட்டங்களைக் கற்பிக்கிறது. இம்முறை இதில் 418 மாணவர் களும் 63 ஆசிரியர்களும் வந்திருந்தனர்.

பல்வேறு நாடுகளைப்பற்றிப் படிக்கும்போது அவற்றை நேரில் கண்டு அந்த நாட்டு மக்களோடு பழகிப் படிக்கும் வாய்ப்பை ஏற்படுத்துவதே இப் பல்கலைக் கழகத்தின் முக்கிய நோக்கம்.

உலகின் எப்பகுதியிலுள்ள மாணவர்களும் இதில் சேரலாமென்று இருப்பினும் பெரும் பகுதி அமெரிக்க மாணவர்களே இதில் பயில்கின்றனர்.

## கார்லைல் நூலகம்

மறைமலையடிகள் தாம் எழுதிய நாற்பதுக்கு மேற்பட்ட அரிய ஆராய்ச்சி நூல்களை எழுதுவதற்கு நாலாயிரத்துக்கு மேற்பட்ட நூல் களைத் தொகுத்துவைத்திருந்தனர். நூலகங்களுக்குப் போய் நூல்கள் எடுத்துப் படிப்பதில் பல இன்னல்கள் இருப்பதை உணர்ந்தே அவர் நல்ல நூல்களைப் பெருவிலை கொடுத்துத் தாமே வாங்கித் தம் நூலகத்தில் சேர்த்தார். அவைதாம் இன்று சென்னையிலுள்ள 'மறைமலை யடிகள் நூல் நிலையம்' தோன்றுதற்குக் காரணமாகும்.

இதே நிலைதான் பேரறிஞர் தாமஸ் கார்லைலுக்கு இலண்டனில் ஏற்பட்டிருக்கிறது. பிரிட்டிசு மியூசியத்திலுள்ள நூல்களைப் பெறுவதில் பல இன்னல்களும் அங்கிருந்து படிப்பதற்குப் போதிய வசதியின்மையு மிருப்பதைக் கண்டு தம் நண்பர்களோடு சேர்ந்து 1841இல் 'லண்டன் லைப்ரரி' என்ற நூலகத்தை 3,000 நூல்களோடு தொடங்கினர்.

இந்த நூற்றுமுப்பது ஆண்டுகளுக்குள் அது வளர்ந்து பெருகி 7,50,000 நூல்களைத் தன்னகத்தே கொண்டு விளங்குகிறது. 16ஆம் நூற்றுண்டில் அச்சான நூற்கள் முதற்கொண்டு அரிய நூல்கள் அனைத்தும் அங்கே தொகுத்து வைக்கப்பெற்றிருக்கின்றன.

இது பெரும்பாலும் எழுத்தாளர்கட்கே பயன்படுகின்றது. இது தோன்றிய பின் இதைப் பயன்படுத்தாத எழுத்தாளர்களே இல்லையெனலாம். எழுத்தாளர்களுக்கு இது ஒரு பொன்னுலகம்,

ஈ. எம். பார்ஸ்டர், ஆல்டஸ் அக்ஸ்லி, செர்லாக் ஓம்ஸ், டி. எஸ். எலியட், தாக்கரே, டிக்கன்ஸ், டென்னிசன், வர்ஜினியா உல்ப், வின்ஸ்டன் சர்ச்சில் போன்ற பெரும் பெரும் எழுத்தாளர்களெல்லாம் இந்நூலகத்தைப் பயன்படுத்தியுள்ளனர்.

வெளியூரிலுள்ள எழுத்தாளர்கள்கூட நூல்களை எடுத்துச் செல்லலாம். ஒரே சமயத்தில் 15 புத்தகங்களைக்கூட எடுக்கலாம். அவர்கள் விரும்பும் நாள்வரை வைத்துக்கொள்ளலாம். ஆண்டுதோறும் ரூ. 400 செலுத்தும் 5,000 உறுப்பினர்கள் இருந்தும் இன்று இந்நூல் நிலையம் பொருள் தட்டுப்பாடு காரணமாக இன்னலுறுகிறதாம்.

## ஒருமைப்பாட்டுக்குச் சமக்கிருதம் வேண்டுமாம்!

இந்தியத் துணைக்கண்டத்தின் ஒருமைப்பாட்டிற்கு இதுகாறும் யாரும் கண்டறியாத ஒரு பெரிய உண்மையைக் கண்டுபிடித்துள்ளார் மைய அரசின் அமைச்சர் வி. சி. சுக்லா அவர்கள். 3-4-72இல் புது தில்லியில் ஒரு சமக்கிருதக் கல்வி விழா நடைபெற்றது. அதில் 100 சமக்கிருத ஆசிரியர்களும், வெளிநாட்டு அறிஞர் சிலரும் கலந்து கொண்டனர். அப்படிப்பட்ட ஒரு விழாவினைத் துவக்கிவைக்கும் வாய்ப்பினைப்பெற்ற அமைச்சர் உள்ளக்கிளர்ச்சியோடு பேசியுள்ளார். "இந்தியாவில் ஒருமைப்பாடு ஏற்படவேண்டுமானால் சமக்கிருதத்தை நாடெங்கும் பரப்புவதில் கவனம் செலுத்தவேண்டும்" என்று அவர் பேசியுள்ளார்.

உயிருடன் நடமாடும் இந்தியே ஆட்சிபீடமேறக் கால்நூற்றாண்டாகக் கடுமுயற்சி செய்துகொண்டிருக்கும்போது மக்கள் நாவிலே நடமாட முடியாமல் ஏட்டளவில் இருக்கும் சமக்கிருதமா இந்நாட்டின் ஒருமைப்பாட்டுக்கு வழிகோல முடியும்?

## குருகுலத்தில் திருமணக்கூடம்

மதுராந்தகத்தில் திரு. நா. சுப்பிரமணியன் அவர்களைப் பொறுப்பாளராகக்கொண்டு புதிதாக ஒரு திருமணக்கூடம் அமைக்கப்பட்டுள்ளது. திருமண அரங்கு, நீராடுதுறை, சமையல் இடம், உணவுக் கூடம் ஆகிய அனைத்து வசதிகளுடனும் கூடிய இத்திருமணக்கூடம் நல்ல தமிழ் மணங்கமழும் சூழலில் அமைந்துள்ளதால் அன்பர்கள் இதனை நன்கு பயன்படுத்திக்கொள்வார்களென எதிர்பார்க்கிறோம்.

## கரந்தைத் தமிழ்ச் சங்க மணிவிழா

தமிழவேள் திரு. த. வே. உமாமகேசுவரம் பிள்ளையவர்களால் தோற்றுவிக்கப்பட்டுக் கடந்த 60 ஆண்டுகளாகக் கரந்தைத் தமிழ்ச் சங்கம் நற்றமிழ்ப் பணியாற்றிவரும் செய்தியைத் தமிழன்பர்கள்

அறிவர். இச்சங்கம் ஓர் உயர்நிலைப் பள்ளி, நூல் நிலையம், 'தமிழ்ப் பொழில்' என்னுந் திங்கள் இதழ் ஆகியவற்றைத் திறமுடன் நடத்தி வருகின்றது. இத்தகைய சிறப்புகள் மிக்க கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் மணிவிழாவினை விரைவில் முத்தமிழ் விழாவாக நடத்தவும், **தமிழவேள்** **அவர்கட்குச் சிலை** எழுப்பவும் அன்பர்கள் திட்டமிட்டுள்ளனர். மணி விழாச் சிறப்புற நடைபெறப் பெருநிதி தேவைப்படுகிறது. எனவே தமிழன்பர்கள் அனைவரும் அன்புகூர்ந்து தம்மாலான உதவிகளைச் செய்தருளும்படி சங்கத்தார் வேண்டுகோள் விடுத்துள்ளனர். இவ் வேண்டுகோட்கிசைந்து கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் மணிவிழாவை மாண்புறச் செய்வது தமிழன்பர்களின் கடமையாகும்.

1937இல் இந்தி எதிர்ப்பியக்கந் தொடங்கிய காலத்தில் மதிப்புக் குரிய தமிழவேள் அவர்கள் அவ்வியக்கம் வலிவுபெற ஆற்றிய தொண்டு மறக்கற்பாலதன்று என்பது இங்கே குறிப்பிடத்தக்கது.

## திருவள்ளுவர் குருபூசை

9-3-72இல் மதுராந்தகம் குருகுலத் திருமடத்தில் திருவள்ளுவர் குருபூசை சிறப்பாக நடைபெற்றது. சென்னை உயர் அறமன்ற நடுவர் திரு. என். கிருட்டிணசாமி ரெட்டியார் அவர்கள் தலைமை ஏற்றார்கள். ஔவை. சு. நடராசன், புலவர் முருகவேள், கி. இராமலிங்கனார் ஆகியோர் திருக்குறள் கருத்தரங்கில் கலந்துகொண்டனர். குருபூசை விழாப் பந்தல் மிக அழகுற அமைக்கப்பட்டிருந்தது. கயப்பாக்கம் முத்துலிங்க ரெட்டியார் அவர்கள் வரவேற்புரை வழங்கினர். அன்பர்கள் பலர் திரண்டு வந்து விழாவினைச் சிறப்பித்தனர்.

## திரு. வி. க. அவர்கட்குச் சிலை அமைப்பு

தமிழர்களின் பலதுறைப் பொது முன்னோடியாகவும், செய்தித் தமிழ் வளர்த்தவரும் தமிழ்த்தென்றல் எனப் புகழப்பட்டவரும், காந்தி யடிகளின் வழியைக் கடைப்பிடித்தவரும், தொழிலாளர் நலம்நாடிய வருமான அன்பர் திரு. வி. கலியாணசுந்தரனார் அவர்கட்கு இதுகாறும் உருப்படியான நினைவுச்சின்னம் ஏதும் ஏற்படுத்தப்படவில்லை. இப்போது திருவாரூர் இயற்றமிழ்ப் பயிற்றகத்தார் இம்முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். திருவாரூரில் திரு. வி. க. அவர்கட்குச் சிலை அமைக்கவும், அவர் பெயரில் நூலகம் ஒன்று ஏற்படுத்தவும் தவத்திரு குன்றக்குடியடிகளார் தலைமையில் ஒரு குழு அமைத்துள்ளனர். இம் முயற்சிக்குப் பொருளுதவி செய்ய விழையும் அன்பர்கள் கீழ்க் காணும் முகவரிக்கு அனுப்புவார்களாக.

செயலாளர்,
இயற்றமிழ்ப் பயிற்றகம்
நடவாகனத் தெரு,
திருவாரூர்.

---

திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2-140, பிராட்வே, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர் : வ. சுப்பையா.

பதிவு எண் : M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.